ஸ்ரீ:




# ஸ்ரீராமாநுஜன் 16

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சி. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

10—1—1950 விரோதி௵ மார்கழி௴


## ஆண்டாள் காட்டிய எம்பெருமானார் பெருமை



“பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே” என்று வாழ்த்தப்படுகின்ற ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவையில் பாசுரந்தோறும் ஸ்வாபதேசார்த்தமென்கிற உள்ளுறை பொருள்வகையில் ஆழ்வார்களினுடையவும் ஆசாரியர்களினுடையவும் பலவகைப்பட்ட பெருமைகள் பேசப்படுகின்றனவென்பது ஆழ்ந்த ஆராய்ச்சியில் அறியக் கிடக்கின்றது. விசேஷித்து எம்பெருமானார்பெருமையே அடிக்கடி பேசப்படுகின்றதாகக் காண்கிறது. இங்கு * மாரிமலை முழைஞ்சில் * என்கிற இருபத்து மூன்றாம் பாட்டைக்கொண்டு இதில் தெரிய வருகிற எம்பெருமானார்பெருமையை விவரிப்போமிப்போது.

“மாரிமலைமுழைஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும் சீரிய சிங்கமறிவுற்றுத் தீவிழித்து
வேரிமயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமாபோலே நீ பூவைப்பூவண்ணா உன்கோயில் நின்றிங்ஙனேபோந்தருளிக் கோப்புடைய



சீரியசிங்காசனத்திருந்து யாம்வந்த காரியமாராய்ந்தருளேலோரெம்பாவாய்.”

கண்ணபிரான் திருப்பள்ளியறையில் நின்றுமெழுந்து சிங்கக்குட்[illegible]ால் புறப்பட்டெழுந்தருளி நடையழகுகாட்டி நடந்தருளிச் சிங்காசனத்தில் [illegible] கோபிமார்தாங்கள் வந்த காரியத்தை ஆராய்ந்தருளவேணுமென்று கோருவதாக அமைய[illegible]ப்பட்டுள்ளது இப்பாசுரம்.

கண்ணபிரானுக்கு ராமாநுஜனென்கிறவொரு திருநாமமுமுண்டே; ராமனென்று பலராமனைச் சொல்லும்; அவனுடைய தம்பி கண்ணபிரானென்கிற காரணத்தினால் ராமாநுஜன் கண்ணனாகிறான். ஆனதுபற்றியே முகுந்தமாலையில் “ஹே கோபாலக!” என்னும் சுலோகத்தில் “ஹே ராமாநுஜ!” என்றும் ஸ்ரீக்ருஷ்ண பகவான் விளிக்கப்பட்டுள்ளான். ஆகவே ராமாநுஜனை கண்ணபிரானை நோக்கி இங்குள்ள பிரார்த்தனையானது ராமாநுஜரான எம்பெருமானாரையும் நோக்கியதென்று கொள்ளத் தகுதியுண்டு. பாசுரத்திலுள்ள சொற்களெல்லாம் எம்பெருமானார் பரமான பொருளிலும் நன்கு பொருந்தும்படியை விளக்குவோம்.

இப்பாட்டில் பூவைப்பூவண்ணு வென்பது விளி. காயாம்பூவண்ணங் கொண்ட கண்ணபிரானே! என்று அந்யாபதேசத்தில் பொருள். ஸ்வாபதேசத்தில், 'பூவைப்பூ அண்ணு' என்று பிரித்து, புஷ்பம் போன்ற திருத்தமையனுரே! என்பதாகப் பொருள் கொள்வது. எம்பெருமானுர் ஆண்டாளுக்கு அண்ணராகையாலே அண்ணு! என்றழைக்கத்தகும். அவர் புஷ்பம்போன்றிருத்தலாவது—புஷ்பமானது தன்னைச்சுற்றிப் பல்லாயிரம் வண்டுகள் மொய்க்கும்படி யிருப்பதுபோல ஸ்வாமிதாமும் ரஸிகர்களான பலசிஷ்யர்கள் நெருங்கிச் சூழப்பெற்றிருப்பதேயாம். *போந்ததென்னெஞ்சென்னும் பொன்வண்டு உனதடிப் போதிலொண்சீராந் தெளிதேனுண்டமர்ந்திடவேண்டி* என்று இராமாநுச நூற்றந்தாதியிலருளிச்செய்தபடி திருவரங்கத்தமுதனார்போன்ற பலபல வண்டுகள் மொய்க்கப்பெற்ற பூ எம்பெருமானுரென்க. பூவைப்பூவென்று விசேஷித்தொரு புஷ்பத்தைச்சொன்னது புஷ்பஸாமாந்ய விவக்ஷையினுலென்க. பூவைப்பூவென்கிற காயாம்பூவையே கொண்டாலும் குற்றமில்லை. ஸ்வாமி எம்பெருமானுர் காயாம்பூவண்ணங்கொண்ட கண்ணனைத் திருவுள்ளத்தில் நிரந்தரமாகக் கொண்டிருக்கையாலே அக்கண்ணனது திருமேனியின் நிழலீட்டாலே ஸ்வாமியின் திருமேனியும் பூவைப்பூப்போலவே அந்தரங்கபக்தர்களுக்குக் காட்சி தருமென்க. இவ்விடத்தில் *அபி பணிபதிபாவாத்* என்கிற [ஸ்ரீரங்கராஜஸ்தவம் 1-45.] பட்டர் ஸ்ரீஸூக்தியை அநுஸந்திப்பது.

Released by Maran's Dog ,Toronto, Canada

எம்பெருமானுரைச் சீரியசிங்கம்போல் எழுந்தருளவேணுமென்று அபேக்ஷித்திருப்பது மிகப்பொருத்தமானது. தாடீ பஞ்சகத்தில் முதல் ச்லோகத்தில் *ஜைநேப கண்டீரவ:* என்று ஸ்வாமி ஸிம்ஹமாகச் சொல்லப்பட்டார். நூற்றந்தாதியிலும் *கலி மிக்க செந்நெல் கழனிக் குறையல் கலைப்பெருமானொலி மிக்கபாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து அதனுல் வலி மிக்க சீயமிராமாநுசன்* என்று சீரிய சிங்கமாகச் சொல்லப்பட்டார் ஸ்வாமி.

Released by Maran's Dog ,Toronto, Canada

இனி, பாட்டினடி தொடங்கி ஒவ்வொரு சொல்லாக எடுத்துக் கொண்டு விவரணங் காட்டுவோம். மாரி—மழைகாலத்தில் என்றபடி. சிங்கமானது மழைகாலத்தில் மலை முழஞ்சில் [பர்வதகுஹையில்] மன்னிக்கிடந்துறங்குமாம். எம்பெருமானுராகிய சிங்கத்திற்கு எது மலை? எது முழஞ்சு? என்பதைப் பற்றிப் பிறகு விவரணம் காட்டுவோம். மழை காலம் என்றதைப் பற்றி முன்னம் கேண்மின். உலகில், விரும்பத்தக்க மழையுமுண்டு வெறுக்கத்தக்க மழையுமுண்டன்றே. அப்படியே யிங்கு முண்டு. விரும்பத் தக்க மழையைத் திருக்கச்சிநம்பிகளும் ஆழ்வானும் அருளிச் செய்தார்கள்; வெறுக்கத் தக்க மழையை ஆளவந்தார் அருளிச் செய்தார். எங்ஙனேயென்னில்; தேவராஜாஷ்டகத்தில் *தேவராஜத [illegible] தேவதேவ ஜகத்பதே. த்வதீக்ஷண ஸுதாஸிந்து வீசி விக்ஷேப சீகரை:, [illegible]ருண்ய மாருதா நீதைச் சீதலைரபிஷிஞ்ச மாம்* என்று நம்பிகள் அருளிச் செய்தமழை விரும்பத்தக்க மழை. பகவானுடைய திவ்ய கடாக்ஷாம்ருதவர்ஷமே இங்குச் சொல்லப்பட்ட மழை. கூரத்தாழ்வானும் வரதராஜஸ்தவத்தில் *ஹஸ்தீச! த்ருஷ்ட்யம்ருதவ்ருஷ்டிபிராபஜேதா:* என்று இந்த மழையையே அருளிச் செய்தார். இனி, வெறுக்கத்தக்க மழையை ஆளவந்தாரருளிச் செய்தபடி யென்னென்னில்; ஸ்தோத்ர ரத்நத்தில் *அவிவேக கநாந்த திங்முகே பஹுதா ஸந்தத துக்கவர்ஷிணி, பகவந்! பவதுர்திநே* என்றது காண்க. அவிவேகமாகிற மப்பு மூடப்பெற்று வழிநிகைத்து அலமரும் படியாய் பலவகைத் துன்பங்கள் சொட்டுச் சொட்டென்று துளிக்க நிற்பதாய் இருப்பதாம் ஸம்ஸார துர்திநம். (மழைகாலத்து நாளுக்கு துர்திநமென்று பெயர்.)

ஆக, உத்தேச்யமான மழையை உண்டாக்குவதற்கும் த்யாஜ்யமான மழையைத் தவிர்ப்ப தற்கும் கடவர் எம்பெருமானார் என்றதாகக் கொள்க.

[மலைமுழஞ்சில்] வேதத்தில் காடக மென்கிறவொரு ப்ராஹ்மண பாகத்தில் * ஸரஆஜொ ஹ த்ரிபிராயுர்பிர் ப்ரஹ்மசர்யமுவாஸ * என்று தொடங்கி ஓர் உபாக்க்யானம் ஓதப்பட்டுள்ளது. பரத்வாஜமஹர்ஷியானவர் முந்நூறு பிராயம் வாழ்ந்திருக்கும் படியான வரம்பெற்று அந்த வாழ்நாள் முழுவதும் வேதங்களையே ஓதினாம். ஆயுள்முடிவடையுந் தருவாயில் தேவேந்திரன் வந்து காட்சி தந்து 'முனிவரே! இன்னமும் ஒரு நூறு பிராயம் தருகிறேன்; பெற்றுக் கொள்ளுகிறீரா? அவ்வாயுளில் என்ன செய்வதாக உத்தேசிக்கிறீர்?' என்று கேட்க, அதிலும் வேதமேயோதி சதுர்வேத பாரங்கதனுவேன் என்று முனிவர் கூற, இது வரை இம்முனிவர் ஓதின வேதத்தின் அளவை இவர்க்குக் காட்ட வேணுமென்று கருதிய இந்திரன் எங்குங் கண்டறியாத மூன்று பெரிய மலைகளை முன்னே காட்டி அம்மூன்று மலைகளிலிருந்து மூன்று பிடி மண்ணெடுத்து 'பரத்வாஜமுனிவரே! முந்நூறு வருடங்களாக நீர் ஓதிய வேதம் இம் மூன்று பிடி மண்ணளவானதே; அதோ காண்கிற மூன்று மலையளவான வேதங்கள் நீர் ஓதாத பாகமாகும்' என்று கூறினதாக அவ்வுபாக்கியான முள்ளது. இதன் படி வேதமே இப்பாசுரத்தில் மலையாகக் கூறப்பட்டது. வேதமனைத்துக்கும் வித்தாகுமே கோதைதமிழ்.

மஹா பாரதத்தில் யக்ஷப்ரச்னத்திற்கு விடை கூறுகின்ற தருமபுத்திரர்—"ச்ருதிர் விபிந்நா ஸ்ம்ருதயோ விபிந்நா: நைகோ முநிர் யஸ்ய மதம் ப்ரமாணம், தர்மஸ்ய தத்வம் நிஹிதம் குஹாயாம் மஹாஜநோ யேந கதஸ் ஸ பந்தா: * என்றுரைத்த ச்லோகம் ப்ரஸித்தமானது. இதன் படி தர்மஸூக்ஷ்மம் பதிந்து கிடக்குமிடமே அந்த வேதமலையின் குஹையாகும். "தத்வம் நிஹிதம் குஹாயாம்" என்றன்றோ சொல்லப்பட்டுள்ளது. ஸ்ரீராமாயணத்தில் வாலியை நோக்கிப் பெருமாள் கூறுமிடத்து * ஸூக்ஷ்ம: பரமதுர்ஜ்ஞேய ஸ் ஸதாம் தர்ம: ப்லவங்கம! * என்றதும் இதற்குச் சார்பாகும். ஆக, வேதங்களில் தர்ம ஸூக்ஷ்மம் பொதிந்துள்ள விடங்களே மலைமுழஞ்சு என்னப்பட்டது. அதில் மன்னிக் கிடந்துறங்கும் சீரிய சிங்கம் எம்பெருமானார். மன்னிக்கிடந்துறங்குகையாவது—* அஸ்தமிதாந்யபாவம் * என்கிறபடியே வேறிடங்களில் சிறிதும் நெஞ்சு செல்லுத லின்றி அவ்விடத்தே நெஞ்சைப்பொருந்தவைத்து அங்குள்ள நுட்பமான அர்த்த விசேஷங் களைக் கண்டறிந்து ஆனந்தப்படுகை. உறங்குங்காலத்தில் துக்க லேசமும் தோன்றாமல் * ஸுகமஹமஸ்வாப்ஸம் * என்னும்படி ஆனந்தாநுபவமாயேயிருப்பதால் உறங்குகையும் ஆனந்திக்கையும் பர்யாயமாகக் கொள்ளத்தக்கது. * வேதோத்தம்ஸ குஹாவிஹார படுநா ஸ்ரீசைலச்ருங்கோல்லஸந்மாயா கேஸரி மாநிதேந கஹநங்யாயாடவீசாரிணா, கம்பீரேண பராத்ம பேதந மஹாநாதேந நாதேந மே குப்தோஹம் யதிஸார்வபௌமஹரிணா வர்த்தே ப்ருசம் நிர்ப்பய: * என்ற ச்லோகரத்நத்தை இங்கு நினைப்பது.

அறிவுற்று—மாயாவாதிமத்தகஜகண்டீரவமான ஸ்வாமி, நாம் அவதரித்ததன் ப்ரயோஜனத்தைத் தெரிந்துகொண்டு; (அதாவது) துர்மத நிரஸநத்திற்காகவும் ஸன்மதஸ்தாபனத்திற்காகவுமன்றோ நாம் இங்குவந்து பிறந்திருக்கிறோமென்பதை நினைத்துக்கொண்டு என்றபடி. சிஷ்யோஜ்ஜீவனமே நமக்குப்பணியென்று தெரிந்துகொண்டு என்னவுமாம். தீவிழித்து—* புத்திர்மநீஷா திஷணா தீ: ப்ரஜ்ஞா சேமுஷீ மதி: —புத்திர் மநீஷா திஷணா தீ: ப்ரஜ்ஞா சேமுஷீமதி: * என்ற அமரகோசத்தின் படியே புத்திவாசகமான (தீ) என்கிற சொல்லே இங்கு தீயென்று நிர்த்துள்ளது. ஆகவே, தீவிழித்தென்றது—புத்தி விகஸிக்

கப்பெற்று என்றபடி. ஸ்வாமியினுடைய புத்தியில் ஸங்கோசாவஸ்தை இறைப்பொழுது மில்லாமல் ஸர்வதா விகாஸாவஸ்தையே உள்ளமை கூறினபடி. [வேரிமயிர்பொங்க] இதர மதஸ்தர்கள் ஸந்யாஸாச்ரமம் ஸ்வீகரிக்கும்போது தலையில் மயிர் கூடாதென்று முண்டனம் பண்ணிக்கொள்வர்கள்; ஸ்வாமி அப்படியல்லாமல் "கமநீயசிகாநிவேசம்" "சிகயா சேகரிணம் பதிம் யதீநாம்" "கனாற்சிகைமுடியும்" என்கிறபடியே சிகாபந்தம் பொங்கியிருக்கிறபடியைச் சொல்லுகிறது.

[எப்பாடும் பேர்ந்து] * ஸ்ரீரங்கம் கரிசைல மஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ ஸ்ரீ கூர்மம் புருஷோத்தமஞ்ச பதரிநாராயணம் நைமிசம், ஸ்ரீமத் த்வாரவதீ ப்ரயாக மதுரா யோத்யா கயா புஷ்கரம் ஸாலக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி:* என்கிறபடியே தென்னாடும் வடநாடுமுள்ள திவ்யதேச திவ்யதீர்த்தங்களேற யாத்திரைசெய்தருளினபடியைச் சொல்லுகிறது. [உதறி] * சாறுவாகமத நீறுசெய்து சமணச் செடிக் கனல் கொளுத்தியே சாக்கியக்கடலை வற்றுவித்து மிகு சாங்கியக்கிரிமுறித்திட, மாறுசெய்திடு கணுதவாதியர்கள் வாய்தகர்த்து அறமிகுத்து மேல்வந்த பாசுபதர் சிந்தியோடும்வகை வாது செய்த வெதிராசனர், கூறுமாகுரு மதத்தொடோங்கிய குமாரிலன்மதமவற்றின்மேல் கொடியதர்க்கசாம் விட்டபின்குறுகி மாயவாதியரை வென்றிட, மீறிவாதில்வருபாற்கரன்மத விலக்கடிக் கொடியெறிந்துபோய் மிக்கயாதவமதத்தை மாய்த்தபெருவீரர்நாளும் மிகவாழியே.* என்று ஆர்த்திப்ரபந்தத்தில் மணவாளமாமுனிகள் அருளிச்செய்தபடியும், *காதா தாதாகதாநாம் களதி கமநிகா காபிலீ க்வாபி லீநா* என்று யதிராஜஸப்ததியில் தேசிகனருளிச்செய்தபடியும், * தற்கச்சமணரும் சாக்கியப்பேய்களும் தாழ்சடையோன் சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும் நான்மறையும்நிற்கக் குறும்புசெய்நீசரும் மாண்டனர்* என்று நூற்றந்தாதியில் அமுதனாருளிச்செய்தபடியும் அருசமயச் செடியதனையடியறுத்தபடியை 'உதறி' என்பதனால் தெரிவித்தவாறு. வாலி இராவணனை வாலில் கட்டிக்கொணர்ந்து கிஷ்கிந்தையிலே உதறினப்போலே பரசமயிகளை அவலீலையாக உதறினபடி.

[மூரிநிமிர்ந்து] மூரியென்று சோம்பலுக்குப் பெயர்; சோம்பல்தீர நிமிர்ந்தென்றது —சோம்பல் அடியோடு தலைகாட்டாதபடி அதைப் போக்கினமை சொன்னவாறு. நித்ய நைமித்திக கர்மாநுஷ்டானங்களைச் சோம்பலாலே அறவே விட்டிடுவதும் கௌண்பக்ஷாவலம்பனத்தாலே ஸங்குசிதமாக அநுஷ்டிப்பது மின்றிக்கே முக்ய கல்பமாகவே யநுஷ்டிப்பவர்களில் ஸ்வாமி தலைவர் என்க. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்திலே—" பாஷ்யகாரர் அந்திமதசையிலும் வருந்தியெழுந்திருந்து ஸந்த்யாகாலத்திலே ஜலாஞ்ஜலி ப்ரக்ஷேபம் பண்ணியருளினார்" என்று பணித்துள்ள வாக்கியம் இங்கே அநுஸந்தேயம்.

[முழங்கிப்புறப்பட்டுப் போதரும்] எம்பெருமானாருடைய திக்விஜயயாத்ரையில் எங்கும் ஸிம்ஹகர்ஜனையாகவே இருந்தபடியைச் சொன்னவாறு. யதிராஜஸப்ததியில் * காயஃ கயாஹவக-த-ஹுஹலிபி: பரேஷாம் கர்ணே ஸ ஏஷ கவிதாகிக ஸிம்ஹ நாத: —கார்ய: கதாஹவகுதூஹலிபி: பரேஷாம் கர்ணே ஸ ஏஷ கவிதார்க்கிகஸிம்ஹநாத:* என்று பணிக்கப் பட்டது. எம்பெருமானாரடிபணிந்தவர்கள் பண்ணுமதுவே ஸிம்ஹகர்ஜனையாயிருந்தால் எம்பெருமானாரைப் பற்றிச் சொல்லவேணுமோ? அது ப்ரஸித்தமன்றோ. 'போதருமாபோலே' என்று இங்கு உவமையாகக் கூறியிருந்தாலும் உபமானார்த்தங்களுக்கு உபமேயந்தன்னிலேயே உபஸம்ஹாரமென்று கொள்ளக்கடவது. *இந்துரிந்துரிவ ஸ்ரீமாந்* * ககநம் ககநாகாரம் ஸாகரஸ் ஸாகரோபம:, ராமராவணயோர் யுத்தம் ராமராவணயோரிவ * என்றவைபுங்காண்க. அநந்வயாலங்கார ப்ரக்ரியை.

[உன்கோயில்நின்று இங்ஙனே போந்தருளி] உன் கோயிலென்றது ஸ்வாமியின் திருவவதாரஸ்தலமான ஸ்ரீ பெரும்பூதூரை விவக்ஷிக்கிறது. அங்குநின்றும் பெருமாள் கோயிலாகிய காஞ்சீபுரிக் கெழுந்தருளி திருமலைக்கெழுந்தருளி திருவரங்கம் பெரியகோயிலுக் கெழுந்தருளி திருநாராயண புரமெழுந்தருளி....... இங்ஙனே போந்தருளினபடியைச் சொல்லுகிறது.

[கோப்புடைய சீரிய சிங்காசனத்திருந்து] சிங்காசனம், சீரியசிங்காசனம், கோப்புடைய சீரியசிங்காசனம் என்று மூன்று வகைப்பட்ட ஆஸனமாகக் கொள்ள வேணும். யதிராஜஸப்ததியில் " காதா தாதாகதா நாம் கலதி" (காதா தாதாகதாநாம் கலதி) என்ற ச்லோகத்தின் முடிவில் "பஜதி யதிபதேர் பத்ரவேதீம் த்ரிவேதீம்—பஜதி யதிபதேள பத்ரவேதீம் த்ரிவேதீம் * என்று எம்பெருமானர் த்ரிவேதியாகிற சிங்காசனத்திலே யெழுந்தருளியிருப்பதாகச் சொல்லிற்று. இதன் பொருளை ஒரு வ்யாக்யானகர்த்தாவும் உள்ளபடி உரைத்திலர்; த்ரயாணாம் வேதாநாம் ஸமாஹார: த்ரிவேதீ=த்ரயாணும் வேதாநாம் ஸமாஹார: த்ரிவேதீ; மூன்று வேதங்கள் என்றபடி. ரிக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் ஆகிற மூன்று வேதங்களும் எம்பெருமானர்க்குச் சிங்காசனமாயிருந்தனவாக உரைப்பது சிறப்புடைத்தன்று. பேதச்ருதி, அபேதச்ருதி, கடகச்ருதி என்று மூன்ருக வகுக்கப்பட்ட ச்ருதிகளே த்ரிவேதியாக வேதாந்ததேசிகனுக்கு விவக்ஷிதம். அத்வைதிகளுக்கு அத்வைதச்ருதியொன்றே ஆஸனமாயிற்று; த்வைதிகளுக்கு த்வைதச்ருதியொன்றே ஆஸனமாயிற்று. நம் ஸ்வாமிக்கோ வென்னில் அந்த வுபயச்ருதிகளோடுகூட கடக (வடிக) ச்ருதியும் ஆஸனமாயின. அதாவது, ஸ்வாமி ஒரு ச்ருதியையும் தள்ளாமல் மூன்று ச்ருதிகளையும் முக்கியார்த்தமாகவே கொண்டருளி விசிஷ்டாத்வைத தர்சன நிர்வாஹம் செய்தருளினபடியால் இவர்க்கு அம்மூன்று வேதங்களும் கோப்புடைய சீரிய சிங்காசனமாயிருந்தன வென்கை. இப்படிப்பட்ட ஆசார்ய ஸார்வபௌமரிடத்தே வந்து சேர்ந்த சிஷ்யர்கள் யாம்வந்த காரியமாராய்ந்தருளவேணுமென்று ப்ரார்த்தித்தவாறு.

—:: மற்றென்றும் கேண்மின். ::—

[உங்கள் புழக்கடைப் பாசுரத்தின் விவரணம்.] திருப்பாவையில் * புள்ளுஞ் சிலம்பினகாண் * என்கிற ஆறாவது பாசுரந் தொடங்கி * எல்லேயிளங்கிளியே * என்கிற பதினைந்தாவது பாசுரம் வரையிலுள்ள பத்துப் பாசுரங்கள் பெரியாழ்வார் குலசேகராழ்வார் நம்மாழ்வார் திருமழிசையாழ்வார் பேயாழ்வார் பூதத்தாழ்வார் பொய்கையாழ்வார் தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பாணாழ்வார் திருமங்கையாழ்வார் ஆகிற பதின்மரையும் முறையே யெழுப்புவன என்னும் விஷயத்தை அடியேன் மிக விரிவாகவுரைத்து வெளியிட்டிருக்கின்றேன். அப்படி ஆழ்வார்களை யெழுப்புவதாக நிர்வஹிக்கிற ப்ரகாரமொன்று இருக்கச் செய்தேயும், திருப்பாவையில் ஒவ்வொரு பாசுரத்திலும் எம்பெருமானர் பெருமை அற்புதமாகப் பேசப்படுகிறது என்கிற நிர்வாஹமும் அடியேனுடைய உபந்யாஸங்களில் விவரிக்கப்படுவதுண்டு. உங்கள் புழைக்கடை யென்கிற பதினன்காம் பாசுரத்தினல் காட்டப்படுகிற எம்பெருமானர் பெருமை இங்கு விவரிக்கப்படுகிறது— சில ரஸிகர்களின் வேண்டுகோளுக்கிணங்கி.

உங்கள் புழைக்கடைத் தோட்டத்துவாவியுள் செங்கழுநீர்வாய் நெகிழ்ந்
தாம்பல்வாய் கூம்பினகாண்
செங்கற்பொடிக்கூறை வெண்பல்தவத்தவர் தங்கள்திருக்கோயில் சங்கிடுவான்போகின்றார்

எங்களைமுன்ன மெழுப்புவான்வாய்பேசும் நங்காயெழுந்திராய் நாணாதாய்நாவுடையாய்
சங்கொடுசக்கரமேந்துந் தடக்கையன் பங்கயக்கண்ணானைப் பாடேலோரெம்பாவாய்.

இப்பாட்டில்—நங்காய், நாணாதாய், நாவுடையாய் என்ற மூன்று விளிகளும் எம்பெருமானாருடைய பெருமைக்கு ஏற்ற விளிகளாம். உத்தமபுருஷர்களை நம்பி யென்றும் உத்தமஸ்த்ரீகளை நங்கை யென்றும் கூறுவது வழக்கம். எல்லாவகையான நிறைவும் பொருந்தியவர்களையே இச்சொற்களால் கூறுவர். * சொல்லார் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லாவறநெறி யாவுந் தெரிந்தவன் * என்று நூற்றந்தாதியில் கூறியபடியே ஸகலவித பாண்டித்யங்களும் நிறைந்து அநுஷ்டாந ஸம்பத்தும் நிரம்பியிருக்கப்பெற்ற ஸ்வாமியின் பெருமையை 'நங்காய்!' என்னும் விளியினால் தெரிவித்தவாறு.

[நாணாதாய்!] நாண் என்பது வெட்கத்திற்குப் போலவே அஹங்காரத்திற்கும் பெயர்; தேசிகன் அம்ருதாஸ்வாதினிப் பிரபந்தத்தின் இறுதியில் * காண்பனவு முரைப்பனவு மற்றொன்றின்றி * என்னுஞ்செய்யுளில் * நாண்பெரியோமல்லோம் * என்று பிரயோகஞ் செய்திருப்பதுகாண்க. 'நாம் அஹங்காரம்மிக்கோமல்லோம்' என்பதுவேயன்றோ அங்குப் பொருள். ஆகவே நாணாதாய் என்றது அஹங்காரமற்றவரே! என்றபடி. இது மமகாரமற்றமைக்கும் உபலக்ஷணம். * நீர் நுமதென்றிவை வேர்முதல் மாய்த்தவர்களில் தலைவரானவரே! என்றதாயிற்று.

[நாவுடையாய்!] உலகத்தில் யார்க்கு நாக்கு இல்லை? எல்லார்க்கு முள்ளதே. யாருடைய நாவினால் உலகமெல்லாம் வாழ்கின்றதோ அவரே நாவுடையாராவர்; பிராட்டி திருவடியை நோக்கி * வசா யசஃசவாநு—ஹி—வாசா தர்மமவாப்நுஹி * என்றுள்—வாய் படைத்த ப்ரயோஜனம் பெறுவாயாக என்றாள். *ஸா ஜிஹ்வா யா ஹரிம் ஸ்தௌதி* என்றொருவர்; * ஸா ஜிஹ்வா ஸ்யாத் யயா ஸர்வே ஜீவந்தி ப்ராணிநோ புவி * என்றார் மற்றொருவர்; *ஸா ஜிஹ்வா யத்ர ராஜந்தே வித்யா ஹ்ருத்யாச் சதுர்தச* என்று முரைத்தனர் மற்றொருவர். இவற்றால் தேறின்தென்ன? பகவானை ஸ்துதிக்கும் நாவே நா; உலகுக்கெல்லாம் உதவி செய்யும் நாவே நா; பதினான்கு வித்யைகளையும் தன்னில் கொண்டிருக்கும் நாவே நா—என்றதாகத் தேறிற்று. இத்தகைய நாவுடைமை எம்பெருமானார் பக்கலிலே அற்புதமாகக் காணலாம். (1) சரணாகதி கத்யம் முதலியவற்றால் எம்பெருமானை ஆச்சரியமாகத் துதித்த நாவுடையர். (2) * உக்த்யா தநஞ்ஜயவிபீஷணலக்ஷ்யயா தே ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுனே: பவதா விதீர்ணம், ச்ருத்வா வரம் ததநுபந்தமதாவலிப்தே நித்யம் ப்ரஸீத பகவந் மயி ரங்கநாத! * என்று ந்யாஸதிலகத்தில் தேசிகனும், * காலத்ரயேபி கரணத்ரயநிர்மிதாதிபாபக்ரியஸ்ய சரணம் பகவத்க்ஷமைவ, ஸா ச த்வயைவ கமலாரமணேர்த்திதா யத் க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்ர பவச்ச்ரிதாநாம் * என்று யதிராஜவிம்சதியில் மணவாளமாமுனிகளும் அருளிச்செய்தபடியே வரம்பெற்று ஸ்ரீ வைஷ்ணவவுலகம் முழுவதையும் உஜ்ஜீவிப்பித்த நாவுடையர். ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் எட்டாவதான அதிகாரி விபாகாதிகாரத்தில் "ஒரு மலையில் நின்றும் ஒரு மலையில் தாவும் ஸிம்ஹசரீரத்தில் ஜந்துக்களைப் போலே பாஷ்யகாரர் ஸம்பாந்தலங்கனம் பண்ண அவரோடுண்டான குடல்துடக்காலே நாம் உத்தீர்ணராவுதோமென்று முதலியாண்டானருளிச் செய்த பாசுரம்" என்றுள்ள ஸ்ரீ ஸூக்தி இங்கு விசேஷித்து அநுஸந்தேயம். (3) * ஜயதி ஸகலவித்யாவாஹிநீஜந்மசைல: * என்கிறபடியே ஸகல வித்யைகளும் கமழும்படியான நாவுடையர் ஸ்வாமியே. ஆக, 'நங்காய்! நாணாதாய்! நாவுடையாய்!' என்ற மூன்று விளிகளும் எம்பெருமானார்க்குப் பொருத்தமாயின. இனி, பாசுரத்தில் மற்றுள்ள மொழிகளெல்லாமும் ஸ்வாமிக்கே நன்கு பொருந்தும்படியை விவரிப்போம்.

# ஆண்டாள் காட்டிய எம்பெருமானார் பெருமை

[உங்கள் புழைக்கடைத்தோட்டத்து இத்யாதி.] பாஞ்சராத்ர சாஸ்த்ரங்களில் பகவானுக்குத் திருவாராதநக்ரமங்களைச் சொல்லுமிடத்து 'எம்பெருமானுக்குச் செய்யும் உபசாரங்களை மஹாராஜாக்களுக்குச் செய்யுமுபசாரம் போல் பாவித்துச் செய்யவேணுமென்று சொல்லிற்று. * தமேவ மத்வா பரவாஸுதேவம் ரங்கேசயம் ராஜவதர்ஹணீயம் * என்கிற திருப்பள்ளியெழுச்சித்தனியனும் அதனையே வற்புறுத்தியது. உலகில் செங்கோல் செலுத்துகின்ற அரசனைப்போலவே எம்பெருமான் * அருளார் திருச்சக்கரத்தால் அகல்விசும்பும் நிலனும் இருளார்வினைகெடச் செங்கோல்நடாவுதிர் * என்ற நம்மாழ்வார் பாசுரப்படிக்கும் * பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமேயாள்கின்ற வெம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார் * என்ற ஆண்டாள் பாசுரப்படிக்கும் செங்கோல் செலுத்திவருகிற முறையில் * திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே யென்னும் * என்ற திருவாய்மொழிப் பாசுரத்திற்குப் பாங்காக அரசனுடைய தன்மைகளும் எம்பெருமானுடைய தன்மைகளும் மிகவும் ஒற்றுமைப் பட்டிருக்கின்றனவென்பது காணலாம். எங்ஙனே யென்னில்; அரசனுடைய நிலைமைகளை ஐந்து விதமாகக் காண்கிறோம். 1. பகற்போதில் ஸகல பரிஜந ஸேவிதனாய்க்கொண்டு தன் வீறு தோற்ற நியாயாலயத்திலிருந்து காட்சி தந்து நீதி செலுத்துதல். 2. ராஜ்யத்திலுள்ளாருடைய குணதோஷங்கள் அறிகைக்காக இரவிலே பிறரறியாதபடி கறுப்புடுத்து நகரசோதனம் பண்ணுகை. 3. ராஜ்யத்தில் சிக்ஷைரக்ஷைகளுக்காகத் தான் தனியிருந்து கார்ய விசாரஞ்செய்கை. 4. துஷ்ட மிருகங்களை நிரஸிப்பதற்காக வேட்டையாடுகை. 5. வேட்டையாடின விடாய்தீரப் பூந்தோப்புகளிலே அபிமத விஷயங்களோடே விளையாடுகை. ஆகிய இவ்வைந்தும் உலகிற் காணும் அரசர்கட்குரிய நிலைமைகளாம். * பாரளந்த பேரரசே எம்விசும்பரசே! எம்மை நீத்துவஞ்சித்தோரரசே! * (திருவிருத்தம்) என்னப்பட்ட வானிளவரசனான ஸர்வேச்வரனுக்கும் இவையேபோன்ற ஐந்து நிலைமைகள் உள்ளன. எங்ஙனே யென்னில் ;

1. அரசன் பகற்போதிலே பரிஜநபரிவாரஸேவிதனாய்க் கொண்டு சீரியசிங்காசனத்திருப்பதுபோல, எம்பெருமானும் இருள்கலசாத பகலான பரமபதத்திலே * வைகுண்டேது' பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ்ஸஹ * என்கிறபடியே நித்யரும் முக்தரும் ஸேவிக்கத் தன்திருமாதுடனே தான் தனியரசாயிருக்குமிருப்பு. 2. அரசன் இராப்போதுகளில் பிறரறியாதபடி கறுப்பு உடுத்து நகர சோதனம் பண்ணுவதுபோல எம்பெருமான் * இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்* (திருவாய்மொழி) என்கிறபடியே உள்ளுவாருள்ளிற்றெல்லாமறிகை. 3. அரசன் ராஜ்யத்தில் சிக்ஷைரக்ஷைகளுக்காகத் தனியிருந்தும் அந்தரங்கர்களோடே கூடியுங் கார்யவிசாரம் செய்வதுபோல எம்பெருமானும் * பாற்கடல் யோகநித்திரை சிந்தைசெய்த வெந்தையாய் வாஸுதேவஸங்கர்ஷணப்ரத்யும்ந அநிருத்த ரூபேண வ்யூஹீபவித்து உறங்குவான்போல் யோகு செய்கை. 4. அரசன் துஷ்டஸத்வநிரஸநார்த்தமாக வேட்டையாடுவதுபோல் எம்பெருமானும் * காட்டைநாடித் தேனுகனும் களிறும் புள்ளுமுடன் மடிய வேட்டையாடி வருவானை விருந்தாவனத்தே கண்டோமே* என்கிறபடியே ஆச்ரித விரோதிகளான தேனுகன்பிலம்பன் காளியனென்னும் தீப்பப்பூடுகளை யடங்கவழக்குகை. 5. அரசன் வேட்டையாடின விடாய் தீரப் பூந்தோப்புகளிலே அபிமத விஷயங்களோடே விளையாடுகைபோல எம்பெருமானும் விரோதி நிரஸநச்ரமந்தீர* ஆராமஞ்சூழ்ந்தவரங்கம் கணமங்கைக் காரார்மணிநிறக்கண்ணனூர் விண்ணகரம் சீரார் கணபுரஞ் சேறை திருவழுந்தூர் காரார் குடந்தை கடிகை கடல்மல்லை ஏரார் பொழில் சூழிடவெந்தை நீர்மலை சீராரும் மாலிருஞ்சோலை திருமோகூர் பாரோர் புகழும் வதரி வடமதுரை முதலான திருப்பதிகளிலே இனிது உறைகை.

இவ்வண்ணமாகவே ஸ்வாமியெம்பெருமானர்க்கும் ஐந்து நிலைமைகளுண்டு. எங்ஙனே யென்னில் ; 1. * பஜதி யதிபதேள பத்ரவேதீம் த்ரிவேதீம் * (யதிராஜஸப்ததி.) என்னப் பட்ட கோப்புடைய சீரிய சிங்காசனத்திலேயெழுந்தருளி ஸகல பக்தர்களும் கண்ணுர ஸேவிக்க விருக்கை. 2. * உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகந்தொறும்... புக்கு நிற்குமிராமாநுசன் * என்று நூற்றந்தாதியிற் பணித்தபடியே அந்தரங்கபக்தர்களினுடைய ஹ்ருதய கோசங்களிலே பிறரறியாதபடி பேணியமர்ந்திருக்கை. 3. உபவேதாந்த க்ரந்த நிர்வாஹங்களுக்காக ஏகாந்த மாய்த் தனியே யிருந்தும் ஆழ்வான் ஆண்டான் எம்பார் பிள்ளான் போல்வாரான விரகர் களோடே கூடியிருந்தும் திவ்யார்த்த விசாரங்கள் செய்கை. 4. நாட்டிய நீசச்சமயங்கள் மாண்டன வென்னும்படியே சங்கரபாஸ்கரயாதவபாட்ட ப்ரபாகரர்தங்கள் மதம் சாய்வுறு மாறு வேட்டையாடுகை. 5. பூக்களும் பழங்களும் தழைத்த சோலைகள் போன்ற உபய வேதாந்தக்ரந்த ப்ரவசனத்தில் ஆழ்ந்து அகமகிழுகை. இவ்வளவு விஷயங்களையும் நெஞ்சில் தேக்கிக்கொள்ள முடியாவிட்டாலும், (5) என்று லக்கமிட்டுக்குறித்த விஷயமொன்றை மாத்திரமாவது திடமாக நெஞ்சிற்கொண்டால் * உங்கள் புழைக்கடைத் தோட்டத்துவாவி யுள் * இத்யாதிக்கு இங்கு அறிவிக்கப்படும் உள்ளுறை பொருள் நெஞ்சில் நன்கு பதியும்.

அரசன் தோட்டத்திலே விளையாடுதல் போலவும், மூவுலகுக்கரசன் [ஆராமஞ் சூழ்ந்த] வண்டினமுரலுஞ் சோலை மயிலினமாலுஞ் சோலை கொண்டல்மீதணவுஞ் சோலை குயிலினங் கூவுஞ் சோலை அண்டர்கோனமருஞ் சோலை யணிதிருவரங்கம் முதலான திருப்பதிகளிலே * விஹரதி ஹரௌ லக்ஷ்ம்யா * என்னும்படி விஹரிப்பது போலவும் ஸ்வாமி யெம்பெருமா ஞர் விஹரிக்கும் தோட்டம் இருவகைப் பட்டிருக்கும். ஸ்ரீ பாஷ்ய கீதாபாஷ்ய வேதார்த்த ஸங்க்ரஹாதிகள் ஒருவகையான தோட்டம். திவ்யப்ரபந்த ரஹஸ்யத்ரயாதிகள் மற்றொருவகை யான தோட்டம். உலகில் மஹாதனிகர்கள் அந்தரங்கத் தோட்டமென்றும் பஹிரங்கத் தோட்ட மென்றும் இருவகைத் தோட்டங்கள் அமைப்பது வழக்கம். ஸர்வஸாதாரணங்களான புஷ்ப பலத்ருமங்களை வளர்க்கும் தோட்டம் பஹிரங்கத் தோட்டமாகும். பெருமாள் திருவாராதனத் திற்குரிய திருத்துழாயையும் செண்பகமல்லிகையோடு செங்கழுநீருவாட்சிகளையும் வளர்க்குந் தோட்டம் அந்தரங்கத் தோட்டமாகும். இதுவே புழைக்கடைத் தோட்டமாகவும் வழங்கப் பெறும். இது போல, ப்ரஹ்மஸூத்ரம் பகவத்கீதை உபநிஷத்துக்கள் முதலானவை ஸர்வ ஸாதாரணத் தோட்டமாகவும், திவ்ய ப்ரபந்த ரஹஸ்யத்ரயாதிகள் அஸாதாரணத் தோட்டமாக வும் ஆசாரியர்களால் திருவுள்ளம் பற்றப்படுகின்றன. ப்ரஹ்மஸூத்ராதிகளில் தெரிவிக்கப் படும் அர்த்தங்களிற்காட்டில் பகவத் விஷய ரஹஸ்யார்த்தங்கள் மிகவும் அந்தரங்கமானவை. இதைப்பற்றி விரிவாக நிரூபிக்கவேண்டியவை யுண்டானாலும் இங்குச் சுருக்கமாகச் சொல்லு கிறோம் கேண்மின். ப்ரஹ்மஸூத்ரத்தில் நான்கு அத்யாயங்களும் பதினறு பாதங்களும் ஐந்நூற்றுச் சொச்சம் ஸூத்ரங்களுமுண்டே ; இவற்றுள் ஒரு ஸூத்ரத்திலும் எம்பெருமான் திருவவதாரம் செய்தருளுகிறானென்னும் விஷயம் சொல்லப்படவில்லை ; அவதார சேஷ்டிதங் களைச் சொல்வதற்கு ப்ரஸக்தியே யில்லை. அவன் லக்ஷ்மீபதி என்கிற விஷயமும் சொல்லப் படவில்லை. ப்ரபத்தி வ்யக்தமாகச் சொல்லப்படவில்லை. மங்களாசாஸனமே ஸ்வரூபாநுரூப கைங்கர்யமென்பது சொல்லப்படவில்லை. இங்ஙனே பல குறைகளுள்ளன. திவ்யப்ரபந்தங் களுக்கு இப்படியொரு குறையும் சொல்லவொண்ணது. ஆழ்வார் பாசுரந் தொடங்கும் போதே * எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர் தலைவா ! * என்று அவதாரத் தையே ப்ரஸ்தாவிக்கிறார். * பிறந்தவாறும் ! * என்று சொல்லியும் * எத்திறமுரலினோடிணைந் திருந்தேங்கிய வெளிவே ! * என்று சொல்லியும் மாதக்கணக்கில் மோஹிக்கிறார். * திரு வில்லாத் தேவரைத் தேறேல்மின்தேவு * என்று லக்ஷ்மீ ஸம்பந்தமில்லாத தெய்வத்தை

தெய்வமாகவே எண்ணவேண்டாவென்கிறார். * நெறிகாட்டி நீக்குதியோ * என்று உபாயாந்தரங்களின் அகர்த்தாவஹத்வத்தை மூதலிட்டு ப்ரபத்தியையே வாய்வெருவுகிறார். *ஆட்செய்தாழிப் பிரானைச் சேர்ந்தவன் * என்றும் * உற்றேனுகந்து பணி செய்து உனபாதம் பெற்றேன் * என்றும் * ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்ய வேண்டு நாம் * என்றும் கைங்கர்யமே பரமபுருஷார்த்த மென்று அறுதியிடுகிறார்: தங்களுடைய திவ்ய ப்ரபந்தங்களை மங்களாசாஸநமயமாகவே ஆக்கிவைத்திருக்கிறார்கள். ஸ்ரீராமாநுஜதர்சனமென்கிற ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கு இவையே உயிர்நிலையான திவ்யார்த்தங்களாகையால் இப்படிப்பட்ட புஷ்பங்களும் பழங்களும் பயிராகும் திவ்ய சாஸ்த்ரங்களே ஸ்வாமிக்குப் புழைக்கடைத் தோட்டமாகும். இவை எம்பெருமானார் காலத்திற்கு முந்தி ப்ரசுரப்ரகாசமடையாமல் * த்ராதம் ஸம்யக் யதீந்த்ரை: * என்று தேசிகனருளிச் செய்தபடி எம்பெருமானார் தோன்றியே மிகவிளக்க முற்றபடியால் 'உங்கள் புழைக்கடைத் தோட்டம்' எனப்பட்டது. உம்மாலே விசேஷித்து க்ருஷி செய்து வளர்க்கப்பட்ட தோட்ட மென்றபடி.

[தோட்டத்து வாவியுள்.] வாபீ என்கிற வடசொல் வாவியென்று திரிந்துள்ளது. நீர் நிலையென்று பொருள். நீர்நிலையில்லாத தோட்டம் செழிப்புற்று வளராது. தோட்டத்தில் விளையும் பூக்களும் பழங்களும் செழித்து விளங்குவதற்கு வாவியே காரணமாகும். ஸதாசார்யோபதேசமே இங்கு வாவியென்று மறைத்துச் சொல்லப்படுகிறது. * சாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேசம் புத்தேச் சலநகாரணம், உபதேசாத் ஹரிம் புத்த்வா விரமேத் ஸர்வகர்மஸு * என்கிறபடியே ஸதாசார்யோபதேச மில்லாதபோது சிறந்த அர்த்தங்களை க்ரஹிக்கவும் வளர்க்கவும் போகாதாகையால் வாவியின் ஸ்தானத்திலே ஸதாசார்யோபதேசம் கொள்ளத்தகும். பஞ்சாசார்ய பதாச்ரிதரான ஸ்வாமி ஸதாசார்யோபதேசங்களை நன்கு பெற்றவராவர்.

[செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல் வாய் கூம்பினகாண்] வெளிச்சங்கண்டு அலரும் புஷ்பம் செங்கழுநீர் ; இருள்கண்டு மலரும்புஷ்பம் ஆம்பல். ஸ்வாமிந் ! தேவரீருடைய உபதேசபரம்பரையில் தாமஸமான அர்த்தங்கள் தலைமடிந்து ஸாத்விகமான அர்த்தங்கள் விகாஸமடைந்தன என்றபடி. கலியுக தர்மங்கள் தலைமடிந்து க்ருதயுகதர்மங்கள் தலையோங்கி வளர்ந்தன வென்றபடி. * பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச்சாபம் நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கியாதொன்றுமில்லை, கலியுங் கெடுங் கண்டுகொண்மின் * என்கிற பாசுரமும் அதைப்பற்றின ஐதிஹ்யமும் இங்கே அநுஸந்தேயம்.

[செங்கல் பொடிக்கூறை இத்யாதி.] மேலே 'தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்' என்று திவ்யதேச கைங்கர்ய நிஷ்டர்களின் யாத்திரையைச் சொல்ல நினைத்து *செங்கல்பொடிக் கூறையென்று காஷாயாம்பர சோபிகளான உத்தமாச்ரமிகளை ப்ரஸ்தாவிக்கையாலே, ஸ்வாமி யெம்பெருமானார் திவ்யதேச கைங்கர்யாபி விருத்திக்காக ஆங்காங்கு உத்தமாச்ரமிகளை மடாதிபதிகளாக நியமித்தருளி திவ்யதேச கைங்கர்ய நிர்வாஹ ஸாம்ராஜ்யத்தை அவர்கள் பொறுப்பாக ஆக்கிவைத்த விஷயம் தெரிவிக்கப்படுகிறது. ஸந்யாஸிகள் க்ராமைகராத்ரமாய் ஓடித்திரியும் யோகிகளாயிருக்க வேண்டியிருக்க, அவர்களை மடாதிபதிகளாக்கி பகவத் ஸந்நிதிகளிலே கைங்கர்யங்களைக் குறையற நிர்வஹிக்கும்படி நியமித்தருளினவர் ஸ்வாமி யெம்பெருமானார் தாமேயிறே. *மாடபத்யம் யதி : குர்யாத் விஷ்ணுபூஜாபிவ்ருத்தயே * என்கிற பகவச் சாஸ்த்ரவசனமும் ஸ்வாமிக்குக் கைகொடுத்தது.

[வெண்பல்தவத்தவர்] அப்படிப்பட்ட பகவத் ராமாநுஜ சிஷ்யர்களின் ஏற்றம் சொல்லுகிறதுஇது. பல்லின் வெண்மை சொல்லுவதனால் * யத் தஸ்மை திஷ்டதேந்ய: க்ருபணமசரணோ தர்சயந் தந்தபங்க்தீ * (ஸ்ரீ குணரத்நகோசம்) என்று பட்டர் அருளிச்செய்தபடி க்ஷுத்ரர்களிடத்திலே சென்று பல்லைக்காட்டி இரவாதவர்களாய் * த்ருணீக்ருத விரிஞ்சாதிநிரங்குச விபூதய:, ராமாநுஜ பதாம்போஜஸமாச்ரயணசாலிந:* என்கிறபடியே விரிஞ்சாதி விபூதிகளையும் த்ருணீகரித்திருப்பார் இராமாநுசனடியார் என்கிறது. *க்ஷோணீகோணசதாம்சபாலநகலாதுர்வாரகர்வாநல க்ஷுப்யத்க்ஷுத்ர நரேந்த்ர சாடுரசநா தந்யாந் நமந்யாமஹே* (வைராக்ய பஞ்சகம்) என்று தேசிகனருளிச் செய்தபடியே க்ஷுத்ரப்ரபுக்களிடத்தில் காட்டப்

படாத பல்லே யன்றே வெண்பல்லாகும். *மதநகதனைர் ந க்லிச்யந்தே யதீச்வரஸம்ச்ரயா:* என்றும் * காமாதிதோஷஹரமாத்மபதாச்ரிதாநாம் ராமாநுஜம் யதிபதிம்* என்றும் சொல்லுகிறபடியே காமாதி தோஷவைதேசிகர்களான எம்பெருமானாரடியார்கள் எம்பெருமான் பக்கலிலும் பல்லைக்காட்டார்களென்னும்போது பிறரிடத்திலே பல்லைக்காட்டார்களென்னுமிடம் சொல்ல வேணுமோ ? வெண்பல் என்றதன் கருத்து இதுவே. [தவத்தவர்.] தபஸ்விகள் என்றபடி. இவர்களுக்கு ஏது தபஸ்ஸென்னில்; * ஸ்வாத்யாயப்ரவசநே ஏவேதி நாகோ மௌத்கல்ய:, தத்தி தபஸ் தத்தி தப:—ஸ்வாத்யாயப்ரவசநே ஏவேதி நாகோ மௌத்கல்ய:, தத்தி தபஸ் தத்தி தப:* என்ற தைத்திரீயோபநிஷத்தின்படியே ஸ்வாத்யாயப்ரவசனங்களேயாம் இவர்களுக்குத் தபஸ்ஸு. அன்றிக்கே, தவத்தவர்—மம என்னாதே தவ என்பவர்கள் தவத்தவராவர். "காரியம் நல்லனகள் அவை காணில் என் கண்ணனுக்கென்று ஈரியாயிருப்பாள்" (திருவாய்மொழி) என்கிறபடியே எதையும் எம்பெருமானுக் கென்றே கொண்டிருப்பர்களேயல்லது தமக்கென்று கொண்டிரார்களென்கை. தவ உனக்கு—என்பவர் தவத்தவர்.

[தங்கள் திருக்கோயில் சங்கிடுவான்போகின்றா] கீழ்ச்சொன்ன உத்தமாதிகாரிகள் பகவத் ஸந்நிதிகளில் கைங்கர்யங்களுக்காகப் போகின்றார்கள் என்கிற பொருள் தவிர மற்றொரு ஆழ்பொருளும் இங்கு அறியக்கிடக்கின்றது. தங்கள் இல், திருஇல், கோஇல் என்று மூன்றாகப் பிரித்து ரஹஸ்யத்ரயத்தையும் சொன்னதாகக் கொள்ளவேணும். திருமந்த்ரமானது தங்கள் இல்; த்வயமானது திருஇல்; சரமச்லோகமானது கோஇல். (இதை விவரிப்போம்.) திருமந்த்ரத்தில் அநந்யார்ஹ சேஷத்வ அநந்ய சரணத்வ அநந்யபோக்யத்வங்களாகிற ஸ்வஸ்வரூபம் நன்கு சிக்ஷிக்கப்படுகிறபடியாலே அது சேதனர்களுக்கான கோவில். த்வயத்தில்—பிராட்டி புருஷகாரமானாலல்லது எம்பெருமான் கார்யம் செய்யானென்னும்படியான பிராட்டியின் ஏற்றம் சொல்லுகையாலே அது பிராட்டிக்கான கோயில். சரமச்லோகத்தில் *அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி * என்று எம்பெருமான் தானே காரியஞ்செய்து தலைக்கட்டுவதாகச் சொல்லுகையாலே அது கோவான ஈசன்கோயில். ஆகவே, தங்கள் திருக்கோயிலென்ற விதனால் ரஹஸ்யத்ரயமும் மிக நன்றான முறையில் தெரிவிக்கப்பட்டதாயிற்று. அதிலே, சங்கு இடுவான் போகின்றார்—சங்கு என்று திறவுகோலுக்குப் பெயர். ரஹஸ்யத்ரயப்பெட்டியைச்சாவியிட்டுத்திறந்து அன்பர்களுக்கு அளிக்கப்போகிறார்களென்கை.

[எங்களைமுன்னமெழுப்புவான் வாய்பேசும் நங்காய்] எழுப்புவான் என்றது எழுப்புவதற்காகவென்றபடி. * அநாதிமாயயா ஸுப்த:* என்கிறபடியே அநாதிமாயையினால் உறங்கிக் கிடக்கிற வெங்களை உபதேசாதிகளாலே ப்ரபோதமடைந்தவர்களாகச் செய்யும்பொருட்டு, முன்னம் வாய்பேசும்=* ஓராண் வழியாய் உபதேசித்தார் முன்னோர், ஏராரெதிராச ரின்னருளால்—பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று பேசி வரம்பறுத்தார் பின் * (உபதேசரத்தினமாலை) என்கிறபடியே நியமனவார்த்தையை முன்பு பேசியருளின பரமக்ருபாநிதியே ! என்றவாறு.

[சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையன்] எம்பெருமானாருடைய சரிதையிலே இது மிக மருமமானவொரு விஷயம். "அப்பனுக்குச் சங்காழி யளித்தருளும் பெருமாள்" என்கிறபடியே திருவேங்கடமுடையானுக்காகச் சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையர் ஸ்வாமி. [பங்கயக்கண்ணனை] யாதவப்ரகாசர்பாடே வேதாந்தச்ரவணம் பண்ணும்போது "தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ—தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" என்கிற ச்ருதிக்கு அவர் அபார்த்தம் கூற அதுபொறாமல் கண்ணீர்பெருக்கி * கம்பீராம்பஸ் ஸமுத்பூத ஸம்ம்ருஷ்டநாளரவிகர விகஸித புண்டரீகதளாமலாயதேக்ஷண:—கம்பீராம்பஸ் ஸமுத்பூத ஸம்ம்ருஷ்டநாளரவிகர விகஸிதபுண்டரீகதளாமலாயதேக்ஷண:* என்று சுவைமிக்க பொருள் கூறிப் பங்கயக்கண்ணனைச் சேவித்த இதிஹாஸத்தை நினைப்பூட்டுகிறபடி. .... .... *

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

# செங்கணன்கோச்சோழன்=எண்டோளீசன்

திருக்குடந்தை சமீபத்தில் நாச்சியார் கோயிலென்று வழங்கப்படும் திருநறையூர்க்குத் திருமங்கையாழ்வார் தமது பெரிய திருமொழியாயிரத்தில் பத்துப்பதிகங்கள் [நூறு பாசுரங்கள்] பாடியுள்ளார். அவற்றுள் மூன்றாவது பதிகம் * அம்பரமும் பெருநிலனும் திசைகளெட்டும் * என்று தொடங்குவது. இப்பதிகத்தில் பாசுரந்தோறும் பின்னடிகளில் செங்கணான் கோச்சோழன் என்னுமொரு சோழராசன் இத்தலத்தில் ஈடுபட்டதாகச் சொல்லப்படுகிறது. அதில் எட்டாவது பாட்டில் * இருக்கிலங்கு திருமொழிவா யெண்டோளீசற்கு எழில்மாடமெழுபது செய்து உலகமாண்ட திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்தகோயில் திருநறையூர் மணிமாடம் * என்று ஒரு விசேஷம் கூறப்பட்டிருக்கின்றது. அச்சோழராசன் எண்டோளீசனுக்கு எழுபது ஆலயங்கள் கட்டிவைத்தவனென்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அது சம்பந்தமான விவரணத்தை எம்முடைய திவ்யார்த்த தீபிகையுரையில் [அப்பாட்டின் விரிவுரையில்] மிக விளக்கமாகக் காட்டியிருக்கிறோம். சென்ற திங்களில் வெளியிடப்பட்ட ஸ்ரீராமாநுஜனில் (கெ. 15) சேர்ந்துள்ள 'நான்கண்ட நல்லது' என்னும் நூலிலும் பக்கம் 9-ல் தெளிவு பெறுத்தியிருக்கிறோம்.

அந்நூலை ஸ்ரீமத் காமகோடி சங்கராசார்யஸ்வாமிகளின் மடத்து வித்வான்கள் நன்கு ஆராய்ச்சி செய்து தங்களுடைய அபரிமிதமான ஆனந்தத்தைத் தெரிவித்ததோடு மற்றோர் அருமையான விஷயமும் அன்போடு தெரிவித்துள்ளார்கள். அதனைத் தமிழுலகம் அறியவேண்டுவது அவசியமென்று தோன்றியதனால் இங்குத் தெரிவிக்க விரும்புகின்றோம்.

ஸ்ரீமத் சங்கராசார்ய ஸ்வாமிகள் பல வருடங்களுக்குமுன் தென்னாட்டு விஜய யாத்திரை செய்தபோது ஆங்காங்கு தேவாலயங்களைப்பற்றின உபந்யாஸங்களையும் செய்தார்கள். அவ்வுபந்யாஸங்களெல்லாம் ஒரு புத்தகமாகத் தொகுக்கப்பட்டு வெளிவந்திருக்கின்றன. சமீபத்தில் இரண்டாம்பதிப்பும் வெளிவந்துள்ளது. 2—12—1932 தேதியில் மாம்பலத்தில் செய்த உபந்யாஸம் * நமது ஆலயங்கள் * என்னும் மகுடமுடையது. அதில் செங்கணான்கோச்சோழனைப்பற்றி விரிவான உபந்யாஸம் காண்கிறது. அச்சிடப்பட்டிருக்கின்ற அதனிலிருந்து சில பகுதிகளை இங்கெடுத்து அப்படியே பதிப்பிக்கிறோம்.



## ஸ்ரீ ஜகத்குரு காமகோடி சங்கராசாரிய சுவாமிகளின் வியாஸம்

"ஆதியில் கோச்செங்கட் சோழன் என்று ஒரு சோழ அரசன் இருந்தான். கோ என்றால் கிரீடத்தை உடைய அரசன் என்று அர்த்தம். செங்கண் என்றால் சிவந்த கண்கள் என்று அர்த்தம். ஸம்ஸ்கிருதத்தில் 'ரக்தாக்ஷசோல' என்றும் சொல்லுவர்கள். அந்த சோழ அரசன் பெரிய சிவபக்தன். அவன் அநேக கோயில் திருப்பணிகளைச் செய்திருக்கிறான். அந்தத் திருப்பணிகளுக்கு யானை யேறாத்திருப்பணி என்று பெயர். அதாவது யானை உள்ளே ஏறுகிறதுக்கும்படி குறுகலாகக் கட்டப்பட்டிருக்கிற கோயில்கள் என்று அர்த்தம். இதனாலேயே இதற்கு முன்னால் யானை போகும்படியாயிருந்தன வென்று தெரிகிறது........

யானையேறாத்திருப்பணி என் று ஏன் கோச்செங்கட் சோழன் திருப்பணி செய்ய வேண்டுமென்னில்; யானையின்மேல் அவனுக்குத் துவேஷம் உண்டாயிற்று. பழைய காலத்தில் ஒருவன் மேல் துவேஷமிருந்தால் அவனுக்குச் சிவபக்தி யில்லாமல் போகவேண்டுமென்று சொல்லுவது வழக்கம். அதைத்தான் ஒருவனுக்குச் செய்யும் பெருந்தீங்காக எண்ணினார்கள். ஏன் இந்த அரசனுக்கு யானையின்மேல் துவேஷமுண்டாக வேண்டுமென்றால் அதற்கு ஒரு கதை இருக்கிறது. நாம் ஸ்தலபுராணங்களை நம்பவேண்டும். ஏதோ சில ஸ்தல

புராணங்கள் உத்பத்தி செய்யப்பட்டிருக்கலாமென்று தோன்றுவதனால் எல்லா ஸ்தல புராணங்களும் நம்பத்தக்கவை யல்ல என்று எண்ணக்கூடாது........

திருவானைக்காவில் இப்பொழுதும் ஒரு ஜம்பூ விருக்ஷம், அதன்கீழ் லிங்கம், தும்பிக் கையால் அபிஷேகம் செய்வதுபோல் பக்கத்தில் ஒரு யானை, பக்கத்தில் ஒரு சிலந்திப் பூச்சி இவைகளின்ரூபங்களும் செப்புப் பட்டையம் சாஸனம் இவைகளின் முத்திரைகளும் காணப் படுகின்றன. அதேமாதிரி மதுவனத்தில் தேன்கூடும் காணப்படுகிறது. திருவானைக்காவில் இந்த அடையாளம் இருப்பதற்குக் காரணமென்ன வென்றால் ஜம்பூ மஹரிஷி என்பவர் ஆதிகாலத்தில் அங்கே தபஸ் செய்துகொண்டிருந்தார். அவர் நீண்டகாலம் தபஸ் செய்து கொண்டிருந்ததினால் அவர்மேல் புற்று மூடிக்கொண்டு செடிகொடிகள் முளைத்து ஜம்பூ விருக்ஷம் ஒன்று முளைத்தது. அவர் பூஜித்துவந்த மஹாலிங்கத்தை ஒரு சிலந்தியானது பூஜை செய்துவந்தது. அந்த மஹாலிங்கம் திறந்த வெளியில் இருந்ததனால் அதன்மேல் வெயில்படக்கூடாதென்று அச்சிலந்திப்பூச்சி தன் எச்சிலால் நூல் பந்தல் போட்டுக் கொண்டே இருந்தது. அந்த லிங்கத்தை ஒரு யானையும் தினந்தோறும் தன் துதிக்கையால் காவேரியிலிருந்து தீர்த்தம் கொண்டுவந்து மஹாலிங்கத்துக்கு அபிஷேகம் பண்ணிப் பூஜை செய்துவந்தது. அந்த அபிஷேக ஜலத்தால், சிலந்தி போட்ட பந்தல் அழிந்துவிட்டது. அதைக்கண்டு சிலந்திப்பூச்சி கோபமடைந்து அதனுடைய துதிக்கையினுள் புகுந்து கடித்து விட்டது. ஆயுர்வேதத்தில் லூதா விஷமானது விஷங்களுக்குள் மிகக் கொடியது என்று சொல்லப்பட்டிருக்கிறது. லூதா என்றால் சிலந்தி என்று அர்த்தம். உடனே யானை அந்தச் சிலந்திப்பூச்சியைத் தேய்த்துக் கொன்றுவிட்டு அதன் விஷவேகத்தால் தானும் இறந்துவிட்டது. அந்தச் சிலந்தியானது கோச்செங்கட் சோழனாக மறுபிறப்பில் பிறந்தது. இறக்கும் ஸமயத்தில் கோபத்தினால் கண் சிவந்திருந்ததனால் சிவந்த கண்களையுடைய சோழனாகப் பிறந்தது. ஆகையினால்தான் அந்தச் சோழ அரசனுக்கு யானையைக் கண் டால் மறு பிறப்பிலும் பரமத் துவேஷ முண்டாயிற்று. அதற்காகவே யானை யேறாத் திருப் பணிகளாக 70 (எழுபது) க்ஷேத்திரங்களில் செய்தான். அவன் பெரிய சிவ பக்தனாக இருந்தான். அவனுடைய சிவபக்தி மஹிமையை ஆழ்வார்கள் கூடப் பெரியதிருமொழியில் சிலாகித்திருக்கிறார்கள். நாச்சியார்கோயில் விஷ்ணு ஆலயத்தைக் கோச் செங்கணான் நிர்மாணம் செய்தான் என்று சொல்லும்பொழுது பல சிவாலயங்களைக் கட்டினவனென்று சிலாக்கியமாகச் சொல்லியிருக்கிறார்கள்.

> முருக்கிலங்கு கனித்துவர்வாய்ப் பின்னைகேள்வன் மன்னெல்லாம் முன்னவியச் சென்று வென்றிச்
> செருக்களத்துத் திறலழியச் செற்ற வேந்தன் சிரந்துணித்தான் திருவடிநும் சென்னி வைப்பீர்
> இருக்கிலங்கு திருமொழிவா யெண்டோ ளீசற் கெழில்மாட மெழுபதுசெய் துலகமாண்ட
> திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில் திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே.

பெரியதிருமொழி, 6 6 8."

ஆக இவ்வளவும் ஸ்ரீமத் சங்கராசார்ய ஸ்வாமிகளின் அமுதவாக்கு. இந்த வியாஸத்தினால், செங்கட்கோச்சோழன் எழுபது சிவாலயங்கள் கட்டிவைத்தவன் என்கிற உண்மையும், இவ்விஷயத்தைத் திருமங்கையாழ்வார் பாடியிருக்கிறாரென்கிற உண் மையும் செவ்வனே வெளிவருகின்றமையால் அவ்வாழ்வார் பாடலிலுள்ள "இருக்கிலங்கு திருமொழிவாயெண்டோளீசன்" என்னும் வாக்கியத்திற்கு சிவபெருமான் பொருளல்ல வென்றும் அட்டபுயத்தவனை நாராயணனே பொருளென்றும் சிலர் கூறுவதும் அதைச் சிலர் ஆமோதிப்பதும் ஆதாரமற்றது, நிஷ்பக்ஷபாதிகளான மத்யஸ்த மஹான்களின் கொள் கைக்கு மாறுபட்டது—என்று தேறுகின்றது. இவ்வமுதத்தை உலகுக்கு ஊட்டும்படி கட்ட விட்ட அவ்வான்தான வித்வான்களுக்கு வந்தனம்.—பத்திராதிபர், ஸ்ரீ ராமாநுஜன். P.B.



குன்ற பாக்கம் சீமாச்சார்ஸ்வாமி யென்று ஸுப்ரஸித்தரான

**திருமலை. அனந்தாண்பிள்ளை ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி**

ஸ்ரீகாஞ்சீ. (வைகுண்டவாஸி.)

## திருப்பாவை 12 கனைத்திளங்கற்றெருமை. (மூவாயிரத்திலும் ஆறுயிரத்திலும்.)

(இனித்தானெழுந்திராய) எம்பெருமானர் திருவவதரித்தாப் பாலே காணும் இப் பெண்பிள்ளையும்.

(விவரணம்) இங்கு " அனைத்தில்லத்தாருமறிந்து " என்றதில் நோக்காக " பகவத் விஷயம் ரஹஸ்யமாக அநுபவிக்குமித்தனை, புறம்பு இதுக்கு ஆளுண்டோவென்று கிடக்கிருயாகில் பெண்களையும் க்ருஷ்ணனையும் சேரவொட்டாத ஊரடைய ப்ரஸித்தமாயிற்று என்றுமாம்" என்றருளிச்செய்து, உடனே "எம்பெருமானர் திருவவதரித்தாப்போலே காணுமிப் பெண் பிள்ளையும்" என்கிற ஸ்ரீஸூக்தியிருக்கையாலே ரஹஸ்யமெல்லாம் ஸதஸ்யமானபடிக்கு எம்பெருமானர் நினைவுக்கு வந்து இங்ஙனே யருளிச்செய்யப்பட்டது. மூவாயிரப்படியின் அரும்பதவுரையில் "இப்பெண்பிள்ளையென்றது எழுப்புகிற பெண்பிள்ளையென்ருய் ஆண்டாளென்றபடி. இவள் வாசலிலேயிருந்து அவள் ரஹஸ்யமாகவநுபவிக்க அத்தை வெளியிட்டாளென்று கருத்து" என்கிற விவரணம் காணப்படுகிறது. இதில் பொருத்தமிருப்பதாகத் தெரியவில்லை யென்று சில பெரியார் கூறுகின்ருர்கள். இப்பெண்பிள்ளையென்றதற்கு 'இப்பாட்டிலெழுப்பப்படுகிற பெண்பிள்ளை' என்னும் பொருள்தான் ஸ்வரஸமானது. இப்பெண்பிள்ளைக்கும் எம்பெருமானர்க்கும் எந்த அம்சத்தில் ஸாம்யத்தை ஆசாரியர்கள் திருவுள்ளம்பற்றினர்களென்று ஆராயவேண்டும். அந்யாபதேசார்த்தத்தைவிட்டு ஸ்வாபதேசார்த்தம் கொள்ளுமளவில் இப்பாட்டில் "கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி நினைத்துமுலைவழியே நின்றுபால்சோர நனைத்தில்லஞ்சேறுக்கும் நற்செல்வன் தங்காய்" என்ற முதல் மூன்றடிகளினல் எம்பெருமானருடைய இயல்பே வெட்டவெளிச்சமாகப் பேசப்பட்டிருக்கிறதென்னுமிடம் அறியப்பெறலாகும். ஸ்வாமியெம்பெருமானர் அநுவ்ருத்திப்ரஸந்நாசார்யர்களான மற்ற ஆசார்யர்களைப் போலல்லாமல் க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யராய் கன்றுகள்போன்ற சிஷ்யர்களுக்குத் திருவுள்ளமிரங்கி, உபஸத்திபண்ணிக் கேட்பார் இல்லாமலிருந்தாலுங்கூட தமது கடமையை நினைத்துப் பால்போன்ற சீரிய பொருளை வர்ஷித்தருளினவர் என்று ப்ரஸித்திபுள்ளது. அதை நினைப்பூட்டும்படியான ஸூக்திவிந்யாஸம் முதல் மூன்றடிகளில் அமைந்திருப்பது காண்க, முலைவழியே நின்று பால்சோர நனைத்து இல்லம் சேறுக்குமது எருமையே யொழிய, எழுப்பப்படுகிற பெண்பிள்ளையல்லவே; ஆகவே எம்பெருமானர்க்கும் இப்பெண்பிள்ளைக்கும் எப்படி ஸாம்யம் நிர்வஹிக்க முடியும்? என்ற சங்கை வேண்டா. அந்த இல்லத்தில் நடைபெறும் விஷயத்தைச் சொல்லியிருப்பதானது இல்லத்தவளான பெண் பிள்ளையின் பெருமையைச் சொன்னவாறேயாகும்.

## திருப்பாவை 14 உங்கள் புழைக்கடை. (ஆறுயிரப்படி.)

(செங்கல் பொடிக்கூறை.) தாமஸப்ரக்ருதிகளைச் சொல்லுகிறது என்று எம்பார். தம: ப்ரசுரர் உணர்ந்தார்களென்று சொல்லியோ எழுப்புவதென்று ஸத்த்வநிஷ்டரான ஸந்யாஸிகளைச் சொல்லுகிறதென்று திருமலைநம்பி.

## திருப்பாவை 15 எல்லேயிளங்கிளி. (மூவா. ஆறு.)

(சில்லென்றழையேன்மின்) திருவாய்மொழி பாடாநின்ருல் செல்வரெழுந்தருளுகையும் அஸஹ்யமாமாப்போலே.

(" திருவாய்மொழிபாடுகை திருப்புன்னைக்குக்கீழே " என்பது அரும்பதவுரை.)

அங்கேயே (உனக்கென்ன வேறுடைமை) நீயொருவர்க்கும் விரோதியல்லை, நீபுக்குத் திருவடித் தொழு என்ன, ஆழ்வான் வார்த்தையை நினைப்பது.

(விவரணம்.) கூரத்தாழ்வான் சோழராஜஸபைக் கெழுந்தருளி அவ்வரசனுடைய கொடுங்கோன்மையினால் திருக்கண்களையிழந்து மீண்டும் கோயிலேற வெழுந்தருளிப் பெரிய பெருமாளைத் திருவடிதொழுவதாக ஸந்நிதியினுள்புக்குப் பெரிய ஸ்ரீ பலி பீடத்தருகே தெண்டன் ஸமர்ப்பித்துத் தம்முடைய அளவற்ற ஆர்த்தியை ஆவிஷ்கரித்து 'பெரிய நம்பியை அங்கீகரித்தாப் போலே அடியேனையும் அங்கீகரித்தருளலாகாதோ?' என்று திருவுள்ளம் நொந்து விண்ணப்பஞ் செய்து, பின்பு உள்ளே புகுந்து ஸேவிப்பதாக எழுந்தருள, " ராமாநுஜருடைய ஸம்பந்தமுடையா ரொருவரும் உள்ளே புகவொண்ணாது " என்று சோழன் கட்டளையிட்டுவைத்தபடி அவனது ஸேவகர்கள் ஸந்நிதிவாசலிலே நின்று ஆழ்வானை உள்ளே புகவொட்டாமல் தகைய, அங்குள்ளாரில் சிலர் " இந்த ஐயங்கார் மற்றவர்களைப் போலல்லர், இவர் ஆத்மகுணங்கள் நிரம்பியவர்; இவரைத் தடைசெய்யாது புகுரவிடலாம் " என்று சொல்ல; இவற்றைக் கேட்ட ஆழ்வான் திடுக்கிட்டு நடுங்கி நாவடிபின்வாங்கி 'ஐயோ! எல்லார்க்கு முண்டான ஆத்மகுணம் ஆசார்ய ஸம்பந்தத்துக்கு ஹேதுவாயிருந்தது; அடியேனுக்குண்டான ஆத்மகுணம் ஆசார்ய ஸம்பந்தத்தை அறுத்துக் கொள்ளுகைக்கு ஹேதுவாய் விட்டதோ!' என வெறுத்துக்கொண்டு புறப்பட்டு 'என் பேற்றுக்கு எம்பெருமானார் திருவடி ஸம்பந்தமே அமையும்; அந்த ஸம்பந்தத்தை அஸத்கல்பமாக்கிப் பெருமாளை ஸேவிக்கவேண்டுவதில்லை' என்று உறுதிகொண்டு அன்றே திருமாலிருஞ்சோலைக்குப் புறப்பட்டருளினர் என்பது இதிஹாஸம். இங்கு, ராமாநுஜ ஸம்பந்திகளை ஸந்நிதிக்குள்ளே புகவிடக்கூடாதென்கிற அரசனது கட்டளையின்படி ஆழ்வானையும் விலக்கவேண்டியிருக்க, ராமாநுஜ ஸம்பந்தத்தை உபயோகமற்றதாக்கி இவருடைய ஆத்மகுண பூர்த்தியையே அவர்கள் மதித்தபடியால் அது ஆழ்வானுக்கு அஸஹ்யமாயிற்று. அது தோன்ற ஆழ்வானருளிச்செய்த வார்த்தை " உனக்கென்ன வேறுடைமை " என்றவிடத்திற்கு மிகவும் பொருத்தமானது.

## திருப்பாவை 16 நாயகனாய்நின்ற. (ஆறாயிரப்படி)

(அவதாரிகையில்—) நஞ்சீயர், பிள்ளைக்கு, " ரஸவாதம் கைப்பட்டவன் இருந்தவிடமெல்லாம் பொன்னுமாப்போலே ப்ரமேயம் கைப்பட்டவனுக்குச் சொல்லிற்றெல்லாம் வார்த்தையாம் " என்றார்.

(நாயகனாய் நின்ற)... ஆளவந்தார் எம்பெருமானை ஸ்தோத்ரம் பண்ணவென்று புக்கு ஆசார்ய ஸ்தோத்ரத்திலே யிழிந்தார்; அதுக்கடி, ஒருவன் ஒரு ரத்னத்தைக் கொடுத்தால் அதின் விலையை அறியவறியக் கொடுத்தவன் பக்கலிலே விருப்பம் பிறக்குமாபோலே, சாஸ்த்ரங்களெங்கும் அப்யஸித்துப் பார்க்குமிடத்து உபாயமாகத் தோற்றுகிற கர்மஜ்ஞாந பக்திகள் பேற்றுக்கு ஸாதநமாகமாட்டாது, பகவத் ஸம்பந்திகளை முன்னிட்டுக் கொண்டு அவனையே உபாயமாகப் பற்றுமது பேற்றுக்குடலென்று ஸ்வப்ரபந்தத்திலே முதலிலும் முடிவிலும் பரமாசார்யரான பெரிய முதலியாரைப் பற்றினர். * த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே * என்று தாம் அவன் திருவடிகளிலே பண்ணின ப்ரபத்தியையும் கீழிலவற்றோடே காற்கடைக் கொண்டு * நாதமுநிம் விலோக்ய * என்று பெரிய முதலியாரை முன்னிட்டார்.

.........பட்டர் கஞ்சியாரை "பெரிய பெருமாள் தஞ்ச மென்றிருக்குமவரைத் தஞ்ச மென்றிரும்" என்றருளிச் செய்தார். ... ... ... (*)

## திருப்பாவை 18 உந்து மதகளிற்றன். (மூவா. ஆறு.)

(வியாக்கியான முடிவில்) எம்பெருமானார் விசேஷித்து உகந்திருக்கும்பாட்டு இப்பாட்டு.

(விவரணம்.) எம்பெருமானார்க்குத் திருப்பாவை ஜீயரென்று ஒரு திருநாமமுண்டு. திருமடைப்பள்ளிக் கைங்கரியத்திற்குக் கிடாம்பியாச்சான் அமருவதற்கு முன்னே ஸ்வாமி மாதுகரத்திற்கெழுந்தருளுகிறபோது திருப்பாவையநுஸந்தானத்தோடு எழுந்தருள்வது வழக்கம். ஒருநாள் பெரியநம்பி திருமாளிகைக்கு மாதுகரத்திற்கெழுந்தருள, அப்போது, திருக்காப்பு சேர்த்திருக்கையாலே ஸ்வாமியின் மந்தஸ்வரமான அநுஸந்தானத்தைக் கேட்டு அத்துழாய் உள்ளிருந்து வந்து திருக்காப்பு நீக்கி நிற்க, ஸ்வாமி அவளைக் கண்டவாறே மூர்ச்சித்துவிழ, அவள் திருத்தகப்பனான பெரியநம்பி பக்கலிற் சென்று 'ஐயா! கதவைத் திறந்து சென்றேன், என்னைக் கண்டவுடனே ஜீயர் மூர்ச்சித்து விழுந்தார்' என்று சொல்ல; நம்பி ஸர்வஜ்ஞராகையாலே "உந்துமதகளிற்றன் அநுஸந்தானமாயிருக்கும்" என்றருளிச் செய்ய, அது கேட்ட அத்துழாய் 'ஆவதென்?' என்ன, * செந்தாமரைக் கையால் சீரார் வளையொலிப்ப வந்துதிறவாய் * என்று அநுஸந்தியாநிற்க நீ திறந்தவாறே அப்படியே உன்னைக்கண்டு 'நப்பின்னையை ஸேவிக்கப் பெற்றோம்' என்று மூர்ச்சித்தாராகவேணும்'—என்று நம்பி அருளிச் செய்தார்; ஆகையாலே இப்பாட்டு எம்பெருமானாருகந்ததென்று நம் முதலிகள் ஆதரிப்பரென்க. ... ... (*)

## திருப்பாவை 20 முப்பத் துமூவர். (ஆறுயிரப்படி.)

(திருவே) உதாரவாக்குக்களாகிறார்—திருமங்கையாழ்வாரும் ஆளவந்தாரும் ஆழ்வானும் பட்டரும். ... ... ... *

## திருப்பாவை 21 ஏற்றகலங்கள். (ஆறுயிரப்படி.)

(வள்ளல் பெரும்பசுக்கள்) * உதார :—ஸந்தர்சயந் * என்று ஆளவந்தார்.

## திருப்பாவை 22. அங்கண்மாஞாலத்து. (ஆறுயிரப்படி)

(அங்கண்மாஞாலத்தரசர்.)..................வேதாந்தங்களிலே ப்ரஹ்மாதிகளுங்கூட ஏழு ஜன்மம் ஜனித்து அரியஸாதநாநுஷ்டானங்களைப்பண்ணி பின்பு பகவத்ப்ராப்திரூப புருஷார்த்தம் பெற்றார்களாகச் சொல்லாநின்றது. இவ்வருகே எத்தனையேனும் கீழாயிருப்பார் சிலர் சரீராவஸாநகாலத்திலே மோக்ஷம் கிடைக்குமென்று பொதிசோறு கட்டிக்கொண்டிரா நின்றார்கள்; இவையிரண்டும் சேரவிழுந்தபடியெங்ஙனே? என்று பட்டரைக் கேட்க; ஒரு குறையில்லையென்றருளிச்செய்தார்:—"அவன் தன் விபூதியளவுஞ் செல்லப் பச்சையிட்டுப் பெறக்கடவேனென்று கோலக்கடவன். யதோபாஸநம் பலமாகையாலே தத்க்ரதுந்யாயத்தாலே அப்படியேயாயிருக்கும் அவனுக்கு. இவன் தன் பக்கல் ஒன்றுமில்லாமையை அநுஸந்தித்து ப்ரதமபரிஸ்பந்தமே பிடித்து நீயேயெனக்குக் கடவையாகவேணுமென்று காலிலே விழும்; அவனும் அப்படியே தன் தலையிலே யேறிட்டுக்கொண்டு இவன்கைபார்த்திருக்க வேண்டாதபடி தலைக்கட்டிக்கொடுக்கும். அவனுக்குத் தான் கோலின பரப்படங்கலும் விடவேணும்; இவனுக்கு இவ்வளவேயிறே விடவேண்டுவது. அவன் அநுஷ்டிக்கக்கடவவை

யெல்லாம் அநுஷ்டித்துப் பின்பு பலந்தரப் பார்த்திருக்கும்; ஈச்வரனையேயிறே இவன் முதலிலே பற்றிற்று."

அங்கேயே மேலே,—(எங்கள்மேல்)...........ஸிம்ஹம் ஆனையோடே பொராநின்று ளும் குட்டிக்கு முலைகொடுக்குமாபோலேயென்று பட்டர். * குழவியிடைக்காலிட்டெதிர்ந்து பொரும்.*

## திருப்பாவை 23 மாரிமலை முழஞ்சில் (மூவாயிரம் ஆறாயிரம்)

(யாம் வந்த காரிய மாராய்ந்தருள்)...........அழகர் கிடாம்பியாச்சானை அருள்பாடிட்டு ஒன்று சொல்லிக்காணாய் என்ன, * அபராத ஸஹஸ்ரபாஜனம் * என்று தொடங்கி அகதிம் என்ன, நம்பிராமானுசனையுடையயாயிருந்துவைத்து அகதியென்னப்பெறாய்' என்றருளிச் செய்தார்.

ஆறாயிரப்படியில் இவ்வைதிஹ்யம் அவதாரிகையின் முடிவிலே உள்ளது.

## திருப்பாவை 24 அன்றிவ்வுலகம் (மூவாயிரப்படி)

(நின்கையில் வேல் போற்றி) (* வடிவார் சோதிவலத்துறையும் சுடராழியும் பல்லாண்டென்று ஆயுதங்களுக்கு மங்களாசாஸனம் பண்ணினாரிறே தமப்பனார்.) " கதே ஜலே ஸேதுபந்தம் தமப்பனாருக்கும் மகளுக்கும்பணி" என்று ஜீயர் அருளிச் செய்வர்.

## திருப்பாவை 25 ஒருத்திமகனாய். (ஆறாயிரப்படி.)

(ஒருத்திமகனாய்)........அவளுக்கு முலை சுரவாநின்றதாகில் இவன் அழுது முலையுண்ணா நின்றானாகில் உமக்குச் சேதமென்? என்று பட்டர்.

## திருப்பாவை 27 கூடாரைவெல்லும் (மூவாயிரப்படி.)

(யாம் பெறு சம்மானம்) * பதிஸம்மாநிதா ஸீதா என்று—பெருமாள் தோளில் மாலையை வாங்கியிட்டார் என்று ஆழ்வான் பணிக்கும். பட்டரும் பணிக்கும்.

(விவரணம்.) பட்டரும் பணிக்குமென்று காண்பதில் அச்சுப்பிழை யிருக்கும்போல் தோன்றுகிற தென்று சில பெரியார் கூறுகின்றனர். * பதிஸம்மாநிதா ஸீதா * என்ற விடத்திற்கு ஆழ்வான் நிர்வாஹம் மேலே காட்டப்பட்டது. பட்டருடைய நிர்வாஹம் அதனில் வேறாக மற்றோரிடத்தில் காண்கிறது.)

அங்கேயே, (முழங்கைவழிவார) நம்பிதிருவழுதி வளநாடுதாஸர் நெய்படாதோ வென்ன, க்ருஷ்ண ஸந்நிதியாலே த்ருப்தைகளாயிருக்கிறவர்களுக்குச் சோறு வாயில் தொங்கிலன்றோ நெய்வாயில் தொங்குவது என்று பட்டரருளிச் செய்தார்.

[ஆறாயிரப்படி] (யாம்பெறு சம்மானம்).......வெளித்திருமுற்றத்திலே, ப்ரஸாதம்வர அவ்வளவிலே "யாம்பெறு சம்மானம் வந்தது" என்றார் பட்டர்.

## திருப்பாவை 30 வங்கக்கடல் (மூவா. ஆறா)

(அவதாரிகையில்) கன்றிழந்த தலைநாகு தோற்கன்றுக்கும் இரங்குமாபோலே, இப்பாசுரம் கொண்டுபுக நமக்கும் பலிக்குமென்று பட்டர் அருளிச் செய்வர்.

# திருப்பாவையும் திருக்கோயிலும்.

மதுரகவியாழ்வாரும் ஆண்டாளும் உட்பட ஆழ்வார்கள் பன்னிருவருமருளிச்செய்த திவ்யப் பிரபந்தங்களே நாலாயிர திவ்யப்ரபந்தமென்று வழங்கப்பெறுகின்றன. இவற்றுள் இராமாநுசநூற்றந்தாதியும் அடங்குகின்றது. திருப்பல்லாண்டு, திருப்பாவை, கண்ணிநுண் சிறுத்தாம்பு, இராமாநுசநூற்றந்தாதி ஆகிய இந்நான்கும் திவ்யப்பிரபந்தங்களுக்கு அஸாதாரணமானவொரு பெருமையைப் பெறுவதற்கு உரிமையற்றவைபோல் காணப்படுகின்றன. திவ்யப்ரபந்தங்களுக்கு அஸாதாரணமான பெருமை ஏதென்னில், உகந்தருளின நிலங்களாகிய திவ்யதேசங்களை விசேஷமாகப் பேசுகையேயாம். எம்பெருமானுடைய பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரமென்னும் ஐந்துநிலைகளும் திவ்யப்பிரபந்தங்களில் பேசப்பட்டிருந்தாலும் அர்ச்சாவதாரப் பெருமைகளைப் பேசுவதிலேயே இவற்றுக்கு விசேஷநோக்கு என்பது நம் ஆசாரியர்கள் நிலையிட்ட விஷயம். வேதத்திற்குப் பரத்வத்திலே நோக்கு; பாஞ்சராத்ரங்களுக்கு வ்யூஹத்திலே நோக்கு; இதிஹாஸபுராணங்களுக்கு விபவத்திலே நோக்கு; தர்ம சாஸ்த்ரங்களென்கிற ஸ்மிருதிகளுக்கு அந்தர்யாமியிலே நோக்கு; திவ்யப்ரபந்தங்களுக்கு அர்ச்சையிலே நோக்கு—என்னும் விஷயமானது ஆசார்யஹ்ருதயத்தில் "அதவா, வேத வேத்ய ந்யாயத்தாலே பரத்வபர முதுவேதம்" என்று தொடங்கியுள்ள (70) சூர்ணையின் வியாக்யானத்திலே விசதமாகக் காணலாகும். நாம் திவ்யதேசங்களின் பெருமைகளை யநுபவிக்கவேணுமானால் திவ்யப்ரபந்தங்களிலல்லது வேறு எதிலும் அநுபவிக்க முடியாதன்றோ. ஆகவே திவ்யதேசப் பெருமையைப் பகர்வதே திவ்யப்ரபந்தங்களுக்கு அஸாதாரணமான பெருமையென்பது நிர்விவாதமாகும்.

இப்படிப்பட்ட பெருமை திருப்பல்லாண்டு முதலிய மேலேகுறித்த நான்கு திவ்யப் பிரபந்தங்களுக்கு ஸம்பவிக்க ப்ரஸக்தியில்லாமலிருக்கிறது. ஏனென்னில்; 1. பெரியாழ்வார் பாண்டியராஜனுடைய ஸபையிலே பரதத்வநிர்ணயம்பண்ணி விரைந்து கிழியறுத்து யானையின்மீது ஊர்வலம் வருகையில் அந்த மஹோத்ஸவத்தைக் காணவந்த பரமபதநாதனை நோக்கியே பல்லாண்டுபாடித் திருப்பல்லாண்டென்கிற திவ்யப்பிரபந்தத்தை யருளிச்செய்தாராதலால் அப்போது திவ்யதேசப்புகழ்ச்சி எதுவும் செய்ய ப்ரஸக்தியில்லையாயிற்று. 2. திருப்பாவை, கண்ணபிரானுடைய விபவகாலத்திலேயே நோக ஆய்ச்சிகள் ஆசரித்தபடியை அநுகரித்துப் பேசப்பிறந்த பிரபந்தமாதலால் இதிலும் திவ்யதேசப்புகழ்ச்சி எதுவும் செய்ய ப்ரஸக்தியில்லையாயிற்று. 3. கண்ணிநுண் சிறுத்தாம்பு, நம்மாழ்வாரையே தெய்வமாகக் கொண்டு அவரைத் துதிப்பதற்கென்றே தோன்றின பிரபந்தமாகையாலும், 4. இராமாநுச நூற்றந்தாதி, எம்பெருமானாரையே தெய்வமாகக்கொண்டு அவரைத் துதிப்பதற்கென்றே தோன்றின பிரபந்தமாகையாலும் இவற்றிலும் திவ்யதேசப்புகழ்ச்சிக்கு இடமில்லையாயிற்று.

ஆயினும் திவ்யதேசப்ரஸ்தாவமில்லாத பிரபந்தம் திவ்யப்பிரபந்தமாக மாட்டாதென்று கருதியே மேற்சொன்ன நான்கு பிரபந்தங்களிலும் அந்தந்த ப்ரபந்த கர்த்தாக்கள் திவ்ய தேச ப்ரசம்ஸையை ஒருவாறு புகுத்தியுள்ளார்கள். திருப்பல்லாண்டில் அதனைப் புகுத்தியிருக்கிறபடி எங்ஙனேயென்னில், * அல்வழக்கொன்றுமில்லா * என்கிற பாட்டில் செல்வநம்பி யென்னும் ஒரு மஹாநுபாவரை ப்ரஸ்தாவஞ்செய்து அப்பெரியார் திருக்கோட்டியூரில் வாழ்ந்தவர் என்றுகூறி இவ்வழியாலே திருக்கோட்டியூரென்னுமொரு திவ்யதேசத்தைப் பேசினாராயினர். * அணிகோட்டியர்கோன் * என்றது காண்க. அணிகோட்டியென்றது திருக்கோட்டியூரேயாம். திருப்பல்லாண்டில் திவ்யதேசப்ரசம்ஸை ஒருவாறு வருவதற்காகவே 'அணிகோட்டியர்கோன்' என்கிற ஸ்ரீஸூக்தி புகுவிக்கப்பட்டது. மேலுள்ளதான பல ச்ருதிபாசுரத்தில் 'வில்லிபுத்தூர் விட்டுசித்தன் விரும்பிய சொல்' என்றவிடத்து ஒரு திவ்யதேச ப்ரஸ்தாவமிருந்தாலும் அதனால் த்ருப்தியுண்டாக வழியில்லை.

கண்ணிநுண் சிறுத்தாம்பில் பாசுரந்தோறும் குருகூர் என்று வருவதால் அதிலும் திவ்யதேச ப்ரசம்ஸை ஒருவாறு நிகழ்ந்ததாயிற்று. இராமாநுச நூற்றந்தாதியில் "கோவலுள் மாமலராள்தன்னொடு மாயனை" என்றும் "தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்" என்றும் "பொன்னரங்கமென்னில் மயலேபெருகு மிராமாநுசன்" என்றும் "இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலையென்னும் பொருப்பிடம்" என்றும் ப்ராஸங்கிகமாக திவ்யதேசப்ரசம்ஸை செய்திருக்கையாலே அதுதன்னிலும் திவ்யதேசப்ரதிபாதநம் குறைவற்றதாயிற்று.

இனி, திருப்பாவையில் இக்குறையில்லாமை விவரிக்கப்படுகிறது. உண்மையில் திருப்பாவையில் ஒருதிவ்யதேசத்தின் ப்ரசம்ஸையும் ப்ராப்தமாகவில்லை. * திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி அங்குஅப்பறைகொண்ட வாற்றை * என்று அக்காலத்தில் கோபிகள் செய்தபடியை அப்படியே அநுகாரம்செய்தும் அநுவாதம்செய்தும் அருளிச்செய்த பிரபந்தமாதலால் அவ்வாய்ச்சிகள் செய்யாத திவ்யதேச ப்ரசம்ஸையை ஆண்டாள் செய்ய ப்ரஸக்தி யில்லையன்றோ. ஆனால், யசோதைப்பிராட்டி கண்ணனைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டினபடியை அவளுடைய பாவனையினாலே கூறுகின்ற பெரியாழ்வார் * குடந்தைக் கிடந்தானே தாலேலோ * என்றதுபோலவும், ஆய்ச்சிகள் கண்ணபிரான் செய்ததீமைகளை யசோதைப்பிராட்டியிடம் வந்து முறையிட்டபடியைச் சொல்லுமிடத்து * சாளக்கிராமமுடைய நம்பி சாய்த்துப் பருகிட்டுப்போந்து நின்றான் * என்றதுபோலவும், * மன்னுகுறுங்குடியாய் வெள்ளறையாய்! மதிள்சூழ் சோலைமலைக்கரசே கண்ணபுரத்தமுதே! ........ ஆடுக செங்கீரை * என்று, யசோதைசெய்யாத திவ்யதேச ப்ரசம்ஸைகளை ஆழ்வார் தாம் செய்திருப்பதுபோலவும், திருவாய்மொழியில் * சூழ்விசும்பணிமுகிலில் பரமபதாநுபவங்களைப் பேசுகின்ற நம்மாழ்வார் திவ்யதேசப்ரஸக்தி செய்யவேண்டிய அவசியமில்லாதிருக்கவும் * குடந்தையன் கோவலன் குடியடியார்க்கே * என்று திருக்குடந்தைப்பதியின் ப்ரசம்ஸையைச் செய்திருப்பது போலவும் ஆண்டாளும் திருப்பாவையில் திவ்யதேசப்ரசம்ஸை செய்யக்கருதினால் பலபடியாக அதைப் புகுத்தமுடியாமற்போகாது; * வல்லானை கொன்றானை * என்றும் * மல்லரைமாட்டிய தேவாதிதேவனை * என்றும் திருவாய்ப்பாடியிலுள்ளார் பேசமுடியாத கதைகளையிட்டுப் பேசியிருப்பதுபோல * அரங்கத் தரவணைமேலமர்ந்தானைப்பாட எழுந்திராய் * வேங்கடத்தெம் வித்தகனை யேத்தவாராய் * என்று பேசியிருக்கலாம்; * அன்றிவ்வுலக மளந்தாயடிபோற்றி, சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி * என்று வேறவதாரசேஷ்டிதங்களைச் சொல்லி மங்களாசாஸனம் செய்தது போல * அரங்கத்தரவணைமேலமர்ந்தாயடி போற்றி * மாலிருஞ்சோலைமாயனேயடி போற்றி * என்றிங்ஙனே திவ்யதேசப்ரசம்ஸைபண்ணி மங்களாசாஸனம் செய்திருக்கலாம். கோவிலைப்பற்றின பேச்சு அடியோடில்லாமல் திருப்பாவையை முடித்தது ஏன்? என்று ஆராய்ச்சிசெய்ய ப்ராப்தமாகும். இதற்குத் தெரிவிக்கிறோம்.

கோவில் பேச்சு அடியோடில்லாதிருந்தால் இத்திருப்பாவையைப் பெரியோர்கள் திவ்யப்ரபந்தமாகக்கொண்டு ஆதரித்திருப்பார்களோ? இதில் நான்கிடங்களில் கோவில் பேச்சு அழகாகவுள்ளது. 6. புள்ளரையன் கோயில் வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ? 14. தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார். 16. நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய கோயில் காப்பானே. 23. உன் கோயில் நின்றிங்ஙனே போந்தருளி. என்னுமிப் பாசுரங்களில் கோயில் ப்ரஸ்தாவம் வந்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. பொதுவாகக் கோயிலென்று உள்ளதேயன்றி ஒருதிவ்யதேச விசேஷம் சொல்லிற்றில்லையேயென்று குறை யுறவேண்டா; திருவரங்கத்திற்குக் கோயிலென்பதே அஸாதாரணமான வ்யபதேசம். பெரியாழ்வார் தமது திருமொழியில் (2-9-4.) * கொண்டல்வண்ணாவிங்கே போதராயே கோயிற்பிள்ளாயிங்கே போதராயே * என்கிறார். இங்குக் கோயிலென்றது ஸாமாந்ய வாசகமன்றே; தென்னாடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கத் திருப்பதியையே யன்றோ விசேஷித்துச் சொல்லுகிறது.

ஆனால் திருப்பாவையில் கோயிலென்றுவந்துள்ள நான்கிடங்களிலும் ஸ்ரீரங்கந்தான் விவக்ஷிதமோவென்று கேட்டுவிடவேண்டா. அர்த்த சக்தியென்பது வேறு, சப்தசக்தியென்பது வேறு. சப்த சக்தியைப்பற்றின நிர்வாஹமிது. திருவெழுகூற்றிருக்கையில் இரண்டென்கிற லக்கம் வரவேண்டுமிடத்து 'இருமலர்த்தவிசில்' என்றும், நான்கென்கிற லக்கம் வரவேண்டுமிடத்து 'நால்வாய்...வேழம்' என்றுமருளிச்செய்தவற்றை இங்கு நினைப்பது. அங்கு, விசாலமான மலர்என்றும், தொங்குகின்றவாயென்றுந்தானே பொருள், சப்த சக்தியேயன்றோ அங்கு கார்யகாமாவது. அதுபோலக் கொள்க. ஆக, திருப்பாவையிலும் திவ்யதேசப்ரசம்ஸை பரிபூர்த்தியாக வுள்ளதென்று நிரூபிக்கப்பட்டதாயிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

---

# ஸ்ரீபாஷ்ய ஸாரார்த்த ஸங்க்ரஹம்.

## முதல் அத்யாயம்—இரண்டாவது பாதம்.

(13. ஆம் ஸஞ்சிகையின் தொடர்ச்சி.)

## 12. ஸர்வத்ரப்ரஸித்த்யதிகரணம்.

கீழ் முதற்பாதத்தில்—ஸத்வித்யைமுதலானவற்றில் அசேதநவஸ்துவோ சேதநவஸ்துவோ ஜகத்காரணமாகக் கூறப்படுகின்றதேயன்றி, ப்ரஹ்மமென்கிற வஸ்து ஜகத்காரணமாகக் கூறப்படவில்லை என்கிற வாதத்தைப் பரிஹரித்து சேதநா சேதந விலக்ஷணமான பரப்ரஹ்மமே ஜகத்காரணமாக வோதப்படுகிறதென்று ஸமர்த்திக்கப்பட்டது. இதனால்—சேதநா சேதந விலக்ஷணமாக ஸ்வாபிமதமான ப்ரஹ்மத்தில் ஜகத்காரணத்வலக்ஷணத்திற்கு அஸம்பவமென்கிற தோஷம் பரிஹரிக்கப்பட்டதாயிற்று. இனி இரண்டு மூன்று நான்கு பாதங்களினால் அந்த (ஜகத்காரணத்வரூப) லக்ஷணத்திற்கு சேதநனிடத்திலும் அசேதநத்தினிடத்திலும் அதிவ்யாப்தி தோஷம் பரிஹரிக்கப்படுகிறது. இந்த இரண்டாவது பாதத்தில்—சேதந லிங்கங்களையோ அசேதந லிங்கங்களையோ ஸ்பஷ்டமாகக் காட்டாமல் அஸ்பஷ்டமாக ப்ரதிபாதநம் செய்திருக்கின்ற ச்ருதி வாக்யங்களையெடுத்துக்கொண்டு விசாரிக்கும் முகத்தினால் அதிவ்யாப்திபரிஹாரம் செய்யப்படுகிறது.

இதற்கு முந்தியதான இந்த்ரப்ராணாதிகரணத்தில் ப்ராணசரீரகனுக்கு ஜகத்காரணத்வமும் உபாஸ்யத்வமும் சொல்லப்பட்டது; அவ்விரண்டும் சாண்டில்யவித்யையில் ஜீவாத்மாவுக்குச் சொல்லப்பட்டிருக்கிறதாகக்கொண்டு அந்த ஜீவனை ஜகத்காரணம் என்று சொல்லப்படுகிற வாதத்தைப் பரிஹரிப்பதற்காகத் தோன்றுகிறது இவ்வதிகரணம்.

ஸூ. सर्वत्र प्रसिद्धोपदेशात् ॥ 1. 2-1. ஸூ. ஸர்வத்ர ப்ரஸித்தோபதேசாத். 1-2-1.

* ஈக்ஷதி கர்மவ்யபதேசாத் ஸः * (1—3—12.) என்கிற ஸூத்ரத்திலிருந்து ஸः என்னும் [ஸாத்ய வாசகமான பதம்] வருவித்துக்கொள்ளப்படவேண்டும். இது இந்த வொரு ஸூத்ரத்திற்கு மாத்திரமன்று. இந்தபாதம் முழுமைக்குமாம். ஆகவே, ஸர்வத்ர—ஸகல வஸ்துக்களிலும் அவற்றுக்கு உயிராக வுபதேசிக்கப்படும் வஸ்து, ஸः- பரமபுருஷனேயாவன்; ப்ரஸித்தோபதேசாத்—வேறிடத்தில் ப்ரஸித்தமானதை அநுவாதம் செய்திருக்கையாலே—என்று ஸூத்ரத்தின் பொருள்.

சாந்தோக்யோபநிஷத்தில் * सर्वं खल्विदं ब्रह्म तज्जलान्—ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாந் * இத்யாதியாலே சாண்டில்யவித்யை ஓதப்பட்டிருக்கின்றது. "தஜ்ஜலாந் இதம் ஸர்வம் ப்ரஹ்ம கலு" என்று அந்வயம். தஜ்ஜலாந் என்பது இதம் என்பதற்கு ஹேது கர்ப்பமான விசேஷணம். அதிலுள்ள தச்சப்தத்தாலே ப்ரஹ்மம் பராமர்சிக்கப்படுகிறது. தத் ஜ ல அந் என்னும் நான்கு சொற்களின் ஸமுதாயம் தஜ்ஜலாந் என்பது. ஜ, ல, அந் என்ற மூன்றும் தத் என்பதோடு தனித்தனியாய்ச் சேருகிறது. தஜ்ஜ, தல்ல, ததந் என்று கொள்வது. தஜ்ஜம்—அதிலிருந்து உண்டாவது; தல்லம்—அதில் லயமடைவது; ததந்—அதற்கு அதீநமான ஸ்திதியையுடையது என்றுபொருள். 'இதம் ஸர்வம் ப்ரஹ்ம' என்கிற ஸாமாநாதிகரண்ய நிர்தேசத்தினால் ஜகத்துக்கும் ப்ரஹ்மத்திற்கும் அபேதம் தெரிவிக்கப்படுகிறது. ஆக, ப்ரஹ்மத்தினின்று உண்டான படியாலே, ப்ரஹ்மத்தினிடத்தில் லயிப்பதனாலே, ப்ரஹ்மத்திற்கு அதீநமான ஸ்திதியையுடைத்தாயிருக்கையாலே சேதநா சேதநாத்மகமான இவையெல்லாம் ப்ரஹ்மமன்றோ என்பதாகப் பொருள் தேறுகின்றது. இங்கு ஸாமாநாதிகரண்ய நிர்தேசத்தினால் கிடைத்த அபேதமானது கார்ய காரணபாவத்தாலும் சரீரசரீரிபாவத்தாலுமாக இரண்டுபடியாகக் கொள்ளக்கடவது. தஜ்ஜத்வம் தல்லத்வம் என்பவற்றாலான அபேதம் கார்யகாரணபாவத்தினாலாயது. ததந் என்பதனாலான [தததீநஸ்திதிகத்வஹேதுகமான] அபேதம் சரீராத்ம பாவத்தினாலாயது. மண்ணுருண்டை பானையாகப் பரிணமிப்பது போல ப்ரஹ்மம் ஸ்வரூபேண ஜகத்தாகப் பரிணமிக்கமுடியாது. ஏனென்னில், மண்ணுருண்டை விகாரப்படக்கூடியது; ப்ரஹ்மம் நிர்விகாரமானது. விகாரமில்லாதது ஸ்வரூபேண பரிணமிக்கத்தகாதது. 'பாலனாயிருந்தவன் யுவாவாக ஆனான்' என்று சொல்லும்போது ஜீவாத்மாவுக்கு சரீரத்வாரா பரிணாமமென்று இசைவதுபோல, இங்கும் சேதநாசேதநரூப சரீரத்வாரா ப்ரஹ்மத்திற்குப்பரிணாமம் இசையத்தக்கது. ஆக, ப்ரஹ்மமே ஸூக்ஷ்மசேதநாசேதந சரீரகமாய்க்கொண்டும் ஸ்தூலசேதநாசேதந சரீரகமாய்க்கொண்டும் கார்யகாரண பாவாபந்நமாகையாலும், ஜகத்தும் ப்ரஹ்மமும் சரீராத்ம பாவாபந்நமாகையாலும் இருவகைப்பட்ட அபேதமும் தனித்தனியாகச் சிலவிடங்களில் ஓதப்படுகிறது. ஓரிடம் காட்டுவோம்; நாராயணோபநிஷத்தில் ரிக்வேத சிரஸ்ஸில்

* நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே, நாராயணாத் ருத்ரோ ஜாயதே, நாராயணாத் இந்த்ரோ ஜாயதே * என்று ஓதப்பட்ட—ப்ரஹ்மருத்ராதிகளின் நாராயண கார்யத்வத்தைப் பற்றிக்கொண்டு யஜுர் வேத சிரஸ்ஸில் * ப்ரஹ்மா ச நாராயண:, சிவச் ச நாராயண:, சக்ரச் ச நாராயண: * என்று அபேதம் சொல்லப்பட்டது. மேலே காட்டிய இரண்டிடங்களிலும், ப்ரஹ்மா ருத்ரன் இந்திரன் ஆகிய இவர்களை ஒரே வரிசையாக எடுத்திருப்பதனாலும் இவ்விஷயம் திண்ணமாக அறியத்தக்கதாம்.

Released by Maran's Dog ,Toronto, Canada

*நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே* இத்யாதிகளில் நாராயணனுக்கு சதுர்முகாதி சரீரத்வாரா பரிணாமம் விவக்ஷிதமாயிருக்கும். * स ब्रह्मा स शिवः सेन्द्रस्सोऽक्षरः परमस्स्वराट्— ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ் ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட் * என்னுமிடத்தில் பிரமன் முதலானோர்க்கும் பரம புருஷனுக்கும் சரீராத்ம பாவ ப்ரயுக்தமான அபேதமென்னுமிடம் எளிதாகப் புலனாகும். முன்னே *अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः— அந்தர் பஹிச் ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:* என்று பரம புருஷன் எங்கும் ஆத்மாவாக வியாபித்திருக்கிறானென்பதைச் சொல்லி உடனே * ஸ ப்ரஹ்மா ஸ சிவ:* என்று அபேதமாகச் சொல்லியிருக்கையாலே. இப்படி தனித் தனியே ஆங்காங்கு தெரிவிக்கப் பட்டிருக்கின்ற இரண்டு வகையான அபேதமும் ப்ரக்ருதத்தில் * ஸர்வம் கலு * என்பதனால் ஒருங்கே சொல்லப்படுகிறது. ஆகவே இரண்டு வகையான அபேதமும் ஸாக்ஷாத்தாகவும் பரம்பரையாகவும் சரீராத்மபாவ மூலகமாகையாலே * ஸர்வம் இதம் ப்ரஹ்ம * என்றதற்கு— கார்யபூதமான தேவமநுஷ்யாதி சேதநா சேதநாத்மக ஜகத்தை சரீரமாகக் கொண்ட ப்ரஹ்மம் என்று பொருள் தேறுகின்றது.

Released by Maran's Dog ,Toronto, Canada

இங்குப் பூர்வபக்ஷம் ;— * ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம * என்று ப்ரஸ்தாவிக்கப்பட்ட ப்ரஹ்மத்தைக் குறித்து மேலே சொல்லும்போது * एष म आत्मा अन्तर्हृदये— ஏஷ ம ஆத்மா அந்தர் ஹ்ருதயே * என்று சரீரத்தினுள்ளேயிருக்கின்ற ஹ்ருதயத்திலிருப்பு சொல்லப்பட்டிருக்கையாலே, சரீரம் அதனுடைய போகத்திற்கு ஆயதநமென்பதும், அது சரீர ஸம்பந்த நிபந்தநமான ஸுகதுக்கங்களை புஜிக்குமதென்பதும் அற்பமான இடமுடையதென்பதும் தெரியவருகிறது. அவ்விடத்தேயுள்ள *அணீயாந் வ்ரீஹேர் வா யவாத் வா * இத்யாதியினாலே அது அணுபரிமாணகமென்பதும் தெரியவருகிறது. ஆக, ஸுகதுக்க போக்த்ருத்வம் அல்பஸ்தாநகத்வம் அல்பபரிமாணகத்வம் ஆகியவிவை பரமாத்மாவுக்கு ஸம்பவிக்கமாட்டாதவையாய் ஜீவாத்மாவுக்கே ஸம்பாவிதமாயுள்ளவை. ஆகவே ஜீவாத்மா தான் * ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம * என்று உபக்ரமத்திலுள்ள ப்ரஹ்ம சப்தத்தினால் சொல்லப்படுவதாகக் கொள்ளவேணும். அந்தஜீவாத்மாவே விசித்திர விவித கர்ம விசேஷங்களடியாகப் பலவகைப்பட்ட தேவமநுஷ்யாதி ரூபேண ஜநிப்பதனாலே * ஸர்வம் இதம் ப்ரஹ்ம* என்றுசொன்ன அபேதம் யுக்தமாகிறது. என்று.

இதன்மேல் ஸித்தாந்தம் வருமாறு :— * தஜ்ஜலாந் * என்கிற ச்ருதிவாக்யத்தில் தஜ்ஜத்வம் தல்லத்வம் [அதிலிருந்து உண்டாகுகை, அதிலே லயிக்கை] முதலானவற்றை அநுவதித்து அதனாலான அபேதத்தை இங்குச்சொல்லியிருக்கையாலே ஜீவாத்மாவுக்குக் கரும விசேஷங்களினாலாகும் தேவமநுஷ்யாதிபாவத்திற்கு தஜ்ஜத்வம் முதலானவை காரணமாகமாட்டாமையாலும் ஒரு சேதநன் மற்றொரு சேதநனுக்கு ஆத்மாவாகமுடியாதாகையாலும் * ஸர்வம் இதம் * என்று சொல்லப்பட்ட ஸர்வசேதந அபேதம் ஒரு ஜீவாத்மாவினிடத்திலும் ஸம்பவிக்கமாட்டாதாகையாலும் இங்கு ப்ரஹ்ம சப்தத்தினால் நிர்தேசிக்கப்பட்டவன் ஜீவாத்மாவாகமாட்டான். அபரிச்சிந்நனான பரம புருஷனுக்கு ஹ்ருதயமாகிற அல்ப ஸ்தானத்திலிருப்பும் அல்ப பரிமாணமுடைமையும் ஸுகதுக்க போகமும் ஸம்பவிக்கவேண்டியதாகிறதேயென்று பூர்வபக்ஷம் செய்திருக்கிறோமேயென்னில், அதற்குச் சொல்லுகிறோம். பரமாத்மஸ்வரூபம் அபரிச்சிந்நமாயிருந்தாலும் உபாஸகர்களின் அநுக்ரஹத்திற்காக அவர்களின் ஹ்ருதயமாகிற அல்பஸ்தானத்தில் ஸந்நிதி பண்ணியிருப்பதும் அதனால் ஔபாதிகமாக ஏற்படுகிற அல்ப பரிமாணமுடைமையும் அநுஸந்தானத்திற்காவே ஓதப்படுவதால் விரோதமில்லை. கருமங்களின் பலனை யநுபவிப்பதற்காக சரீர சம்பந்தமேற்பட்டால் அதுதான் ஸுக துக்காநுபவத்திற்கு ஹேதுவாகும் ; பரமபுருஷன் ஸ்வேச்சையினாலே செய்யும் உபாஸக சரீர ஸம்பந்தமானது ஸுகதுக்க போகத்திற்கு ஒருகாலும் ஹேதுவாகாது. ஆகவே ஸுகதுக்க போக ப்ரஸக்தியுமில்லை.

ஸர்வத்ரப்ரஸித்த்யதிகரணம் முற்றிற்று.

Released by Maran's Dog ,Toronto, Canada



ஸ்ரீமத் திருமலை திருப்பதி அனந்தாண்பிள்ளை
புரிசை ஸ்ரீரங்காசார்யர் ஸ்வாமி.
(வைகுண்டவாஸி.)

ஸ்ரீ

# உபயராமாயண கதாஸாரம்.

## அயோத்யாகாண்டம்—வான்மீகப்பகுதி

### ஸ்ரீராம யுவராஜபட்டாபிஷேகப்ரயத்ன கெட்டம்.

#### இராமனுக்கு இளவரசு முடிசூட்டக்கருதிய தசரதர் ஆலோசனைக்காக மஹாஸபை கூட்டுதல்.

சத்துருக்கனனென்னுந் தம்பியை உடனழைத்துக்கொண்டு மாமனது நகரத்தை நோக்கிச் சென்ற பரதன் அங்கே கேகய நாட்டில் மனத்திற்கு மிகவும் இனிதாக வாழ்ந்து கொண்டிருந்தனன். அங்கு எல்லா வகையான உபசாரங்களும் குறையற்றிருந்தபோதிலும் அவ்விருவருடைய மனமும் வயது சென்ற தந்தையினிடத்திலும் குணக்கடலான இராமபிரானிடத்திலுமே பதிந்திருந்தது. 'அந்தோ! தந்தையுடன் கூடவிருந்து பணிவிடைகள் செய்யப்பெருமல் தூரதேசத்தில் இருக்கின்றோமே!' என்று விசாரமுற்றிருந்தனர். 'இப்போது இராமபிரானை இளவரசாக்கி இருக்கக்கூடும்' என்றும் எண்ணியிருந்தனர். தசரத சக்ரவர்த்தியும் தேசாந்தரஞ்சென்ற இரு புதல்வர்களை அடிக்கடி நினைத்துக்கொண்டு அவர்களின் பிரிவினால் மிகவும் துயருற்றிருந்தனன். இராமனும் லக்ஷ்மணனும் கூடவே இருந்தபோதிலும் நான்கு புத்திரர்களிடத்திலும் ஒரு நிகரான அன்பைக் கொண்டிருந்த தசரதனுக்குப் பரத சத்துருக்னர்களின் பிரிவு ஆற்ற வொண்ணுததாகவேயிருந்தது. அந்நான்கு புதல்வர்களுள்ளும் ஸ்ரீராமபிரான் தேசும் திறனும் குணமுமெல்லாம் மிக அற்புதமாக அமையப்பெற்றிருந்ததனால் தந்தையின் அன்புக்குச் சிறந்த கொள்கலமாகவே விளங்கினன். இராவணனை வதைக்கவேணுமென்று விரும்பிய தேவர்களின் வேண்டுகோளுக்கு இரங்கிய ஸ்ரீமஹாவிஷ்ணுவேயன்றோ இராமனாக வந்து தோன்றியுள்ளான். ஆனதுபற்றியே அவன் யாவரினும் மேம்பட்டு விளங்கினன். அவ்விராமபிரானுக்கு அமைந்திருந்த தேஹ குணங்களும் ஆத்ம குணங்களும் அளவிட்டுச் சொல்ல முடியாதவை. அங்ஙனம் ஸகல நற்குணங்களும் நன்கு அமையப்பெற்ற இராமபிரானைப் பூமிப்பிராட்டியும் நாதனாகக் கொள்ள விருப்பமுற்றனள். தசரத மஹாராஜனும் ஸ்ரீராமனுடைய திருக்குணங்களையும், அவனுக்கு ஜனங்களிடத்திலும் ஜனங்களுக்கு அவனிடத்திலும் அமைந்துள்ள அளவு கடந்த அன்பையும் நோக்கி அப்புதல்வனை இளவரசாக முடிசூட்டப் பாரித்தனன். அரசாட்சிச் செல்வத்தை இராமபிரானிடத்தில் ஒப்புவித்துத் தான் இளைப்பாற வேண்டுமென்று விருப்பங்கொண்ட அத்தயரதன் மந்திரிகளோடுங் கலந்து ஆலோசித்துத் தனது கருத்தைத் திடப்படுத்திக் கொண்டனன். விரைவாகவே அதனைச் செய்து முடிக்கக் கருதி, அந்தக் கோஸல நாட்டிலடங்கிய பல நகரங்களிலும் மற்றும்பல விடங்களிலுமுள்ள சிற்றரசர்களையும் மஹாஜனங்களையும் விரைவில் வரவழைத்தனன். கேகயராஜனும் ஜனக மஹாராஜனும் வெகு தூரமான விடங்களில் உள்ளவர்களானதுபற்றி, அவர்களை வரவழைக்கத்தக்க அவகாசம் இல்லாததனால் அவர்களை மாத்திரம் வரவழைத்திலன். 'அவர்களும் இச்செய்தியைப் பிறகு கேள்விப்பட்டு மனம் களிப்பர்கள்' என்று எண்ணின தசரதன் மற்றவர்கள் பலரையும் வரவழைத்தனன். வந்து சேர்ந்த அரசர்கள் யாவரும் தசரத ராஜனுடைய ஆஸ்தான மண்டபத்தில் வந்து புகுந்து யோக க்ஷேம விசாரணையோடு மரியாதை மொழிகளைப் பெற்று அரசனெதிரில் உட்கார்ந்தனர்.

**தசரதர் தமது மனோரதத்தை வெளியிடக் கேட்ட அனைவரும் மிகவுகந்து இராமனுக்கே விரைவில் முடிசூட்ட வேணுமென்று வற்புறுத்திக் கூறுதலும், அதற்குக் காரணமாக இராமனுடைய திருக்குணங்களின் அதிசயத்தைக் கூறுதலும்.**

பின்பு தசரதமன்னவன் சபையில் வீற்றிருக்கின்ற அரசர்களனைவரையும் நோக்கி இங்ஙனம் உரைக்கத் தொடங்கினன் ;—" சபையீர்களே ! மிகப் பெரியதான இந்த ராஜ்யத்தை எனது முன்னோர்களான மன்னவர்கள் மிகுந்த மனவூக்கத்துடன் பாதுகாத்து வந்தனரென்பது நீங்களறிந்ததேயாகும் ; அவர்களது வம்ச பரம்பரையிற் பிறந்த நானும், அவர்கள் நடந்த நெறியையே அடியொற்றி எனது ஆற்றலுக்கு ஏற்றவாறு இதுவரையில் குடிமக்களைக் குறிக்கொண்டே பாதுகாத்து வந்தேன் : காத்தல்தொழிலைச் செலுத்துதற்காக வெண்கொற்றக் குடையின் நிழலிலேயே பல்லாயிரமாண்டுகள் வளர்ந்துவந்த எனது சரீரம் மிகவும் மூப்படைந்து விட்டது: அதனால் இனி அரசாங்கக் காரிய நிர்வாஹத்தில் எனது மூத்த குமாரனை ஸ்ரீராமசந்திரனை நியமித்து உங்களது அநுமதியைப்பெற்று நான் இளைப்பாற விரும்புகின்றேன்: மஹாதேஜஸ்வியான ஸ்ரீராமனே உங்களுக்குத் தகுந்த நாதனாயிருக்க வல்லவன் என்று எண்ணுகின்றேன் ; வெகுகாலமாக நான் தாங்கியிருந்த இந்தப் பூமி பாரத்தை அவன் தலையில் இறக்கிவிட்டு வருத்தந்தீர்ந்து இனிதுவாழ விரும்புகின்றேன்: இது யுக்தமான செயலென்று உங்களுக்குத் தோற்றியிருப்பின் இதைச் செய்து முடிக்க நீங்கள் எனக்கு அநுமதி கொடுப்பீர்களாக: உங்கள் அநுமதியின்றி நான் சுதந்திரனாய்ச் செய்வது நியாயமன்றே: இதைப்பற்றி நீங்கள் நன்கு ஆலோசித்து உண்மையில் எனக்கு ஹிதமானது எதுவோ அதைத் தெரிவிக்கவேண்டுகின்றேன் " என்றனன். இவ்வாறாகத் தசரதமன்னவன் சொன்னதை அரசர் முதலானோர் அனைவருங் கேட்டு அளவற்ற ஆனந்தமடைந்தனர். அந்த ஸபையிலிருந்த ஜனக்கூட்ட மனைத்தும் அந்த வார்த்தைக்கு மிகவும் உகந்து ஆனந்தமுள்ளடங்காமல் மிகப்பெரிய கோஷத்தைச் செய்தது. அந்தப் பெரு முழக்கம் எதிரொலியைக் கிளப்பிக்கொண்டே அவ்வாஸ்தான மண்டபத்தின் விமானத்தைக் குலுங்கச் செய்வது போலாயிற்று. எல்லோரும் ஒரே மனமாகவிருந்து தசரதமன்னவனை நோக்கி " மகாராஜரே ! நீர் ஆயிரமாண்டுகள் ஜீவித்து மிக முதிர்ந்த கிழவராயினீர்: ஆதலால் காலதாமதமின்றியே ஸ்ரீராமனுக்கு முடி சூட்டுவீராக: ரகு குலதிலகனான ஸ்ரீராமன் பட்டத்து யானையின்மீது ஏறிக்கொண்டு வெண்கொற்றக் குடையின் நிழலில் வீதியாற எழுந்தருளும் வைபவத்தை எப்பொழுது காணப்போகிறோமென்று நெடுநாளாகவே நாங்கள் பாரிப்புக்கொண்டிருக்கின்றனம் " என்றனர். சபையிலுள்ளோர் யாவரும் அங்ஙனம் ஒருமிப்பாகச் சொன்னதைக் கேட்ட தசரதமன்னவன் தன் விருப்பத்தை அனைவரும் ஆமோதித்தமையால் உள்ளம் பூரித்தனன் இராமபிரானிடத்தில் ஸகல ஜனங்களுக்கும் இங்ஙனம் அன்பு நிறைந்திருக்கும் காரணத்தைத் தான் அறிந்திருந்தும் அவர்கள் வாயிலாகவே அதை இனிதாகத் தெரிந்துகொள்ள விரும்பி அவர்களை நோக்கி, " ஓ மன்னவர்களே ! குடிமக்களே ! என் மனத்தில் தோன்றிய விருப்பத்தை நானே சுதந்திரனாய்ச் செய்து முடித்துக்கொள்ள வல்லவனாயிருந்தும் உங்கள் கருத்தையும் அநுசரித்து நடந்துகொள்ளவேண்டுமென்றெண்ணி உங்களையும் வரவழைத்துக் கேட்டேன். கேட்டவுடனேயே நீங்கள் ' கிழவா ! ஒழிந்துபோ, கிழவா ! ஒழிந்துபோ ; இராமனுக்கே முடிசூட்டவேணும் ' என்று பேரிரைச்சல் செய்து கூறுவதை நோக்குங்கால், என்னால் நீங்கள் யாவரும் மிகவும் துன்பமுற்றிருந்தீர்கள் போலவும், அந்தத் துன்பத்தை எப்போது தவிர்த்துக் கொள்ளப்போகிறோமென்று சமயம் பார்த்திருந்தீர்கள் போலவும் நினைக்கவேண்டியதாகின்றதே ; நான் சிறிதும் தருமம் தவறாமல் அரசாட்சி புரிந்திருக்கவும் நீங்கள் என்மீது இவ்வளவு வெறுப்புக்கொண்டதற்கு யாது காரணம் ? கூறுமின் " என்றான். அதற்கு அனைவரும், " மன்னர்பிரானே ! உன்மீது நாங்கள் யாதொரு குற்றமும்

நினைத்திலோம்; நீ பெற்ற புதல்வன் எல்லையில்லாத நற்குணங்கள் அமையப் பெற்றவனாதலின் அவனது திருக்குணங்களில் ஈடுபட்ட நாங்கள் அவனை அரசனாகப் பெற மிக விரும்பினோம்" என்று கூறி இராமனது தயை, பொறுமை, ஔதாரியம், தைரியம், எளிமை, சீலம் முதலிய ஸகல குணங்களையும் மிகவிரிவாக எடுத்துரைத்தனர். இங்ஙனம் திருக்குணங்கள் நிரம்பப் பெற்றுள்ள இராமபிரானை இனிச் சிறிதும் தாமதமின்றி முடிசூட்டுவதே தகுதியானது என்றுஞ் சொல்லி முடித்தனர்.

**தசரதன், மகுடாபிஷேகத்திற்கு வேண்டிய ஸம்பாரங்களை ஸித்தப்படுத்துமாறு கட்டளையிடுதலும் இராமனை வரவழைத்து நியமித்தலும்.**

சபையோர்கள் இராமபிரானைப் புகழ்ந்து கூறிய இனிய மொழிகளையும் அவர்கள் செய்த நமஸ்காரங்களையும் ஏற்றுக்கொண்ட தசரத மன்னவன் அவர்களை நோக்கி "நீங்கள் இராமனை அரசனாகப் பெறுவதில் மிகுந்த குதூகலங் கொண்டிருப்பதை நான் அறிந்து மிக மகிழ்கின்றேன்; அடுத்துவரும் புஷ்யநக்ஷத்திரமாகிற நன்னாளில் இராமனுக்கு முடிசூட்டவேணும்" என்று சொல்லிவிட்டு, வஸிஷ்ட முனிவரையும் வாமதேவ முனிவரையும் நோக்கி முடிசூட்டுதற்குவேண்டிய பொருள்களை விரைவில் சேகரிக்குமாறு கூறினன். அதனைக் கேட்கலுற்ற குடிமக்கள் யாவரும் மிக்க குதூகலம் கொண்டனர்: பிறகு வஸிஷ்டர் வாமதேவருடன் கலந்து ஆலோசித்து, முடிசூட்டுதற்கு முக்கியமாக வேண்டிய ஸம்பாரங்களையெல்லாம் இன்னின்னவை யென்று ஸுமந்திரரிடம் குறிப்பிட்டுக் கூறி 'இவையெல்லாவற்றையும் ஸூரியோதய காலத்திற்குள் தசரத மன்னவனது அக்னிஹோத்ரக்ருஹத்தில் கொண்டு வந்து சேர்க்கவேண்டும்' என்றும், 'ஆங்காங்கு மிகமிக விசித்திரமான அலங்காரங்கள் குறைவின்றிச் செய்யவேண்டும்' என்றும், 'அந்தணர் முதலானோரையும் அளவின்றி அழைப்பிக்க வேண்டும்' என்றும், வந்தவர்களெல்லாரும் பரம திருப்தியுடனே புசித்துக் களிக்குமாறு போஜன வஸதிகளை மிக்க அதிசயம் பொலியச் செய்விக்கவேண்டும்' என்றும், மற்றும் பலவகையான கட்டளைகளையுமிட்டனர். அவ்வண்ணமாகவே ஸகல ஸந்நாஹங்களும் குறைவின்றி விரைவாக நடந்தேறின. பிறகு மன்னவனால் கட்டளையிடப்பெற்ற ஸுமந்திரர் இராமபிரானைத் தேரின்மீது அழைத்துக்கொண்டு வந்தனர். வரும்பொழுது அவ்விராமபிரானது வடிவழகை எவ்வளவு உற்று நோக்கியும் மன்னவன் சிறிதும் திருப்திபெறவேயில்லை. ஸுமந்திரர் இராமனைத் தேரினின்றும் கைகொடுத்துக் கீழிறக்கின பிறகு இராமன் தந்தை பாதங்களில் தொழுது கைகூப்பி நின்றனன். மன்னவன் அவ்விராமனை அருகிலழைத்துக் கட்டியணைத்து ஓர் சிறந்த ஆஸனத்தில் உட்காரச் செய்து அவனைப் பலவாறு புகழ்ந்து 'ராமா! நாளைப் புஷ்ய நக்ஷத்திரத்தன்று இளவரசு முடிசூடப் பெறுவை; உனக்கு நான் மிகுதியாக உரைக்கவேண்டியது ஒன்றுமில்லை; இயற்கையாகவே நீ ஸகல நற்குணங்களும் நிரம்பப்பெற்றிருக்கின்றனை; ஆயினும் அன்பினால் உனக்குச் சில இதங்கள் சொல்லுகேன் கேளாய்; நீ மேன்மேலும் வினயத்தையே கைப்பற்றியிருக்கவேண்டும்; காமக்குரோதங்கட்கு ஒருபோதும் ஆளாகாதிருக்க வேண்டும்; மதியிற்சிறந்த மந்திரிகளுடன் கலந்தே காரியங்களை நடத்தவேண்டும்; குடிமக்கள் எப்போதும் மனக்களிப்புடனிருக்கும்படியே நீ நடந்துகொள்ளவேண்டும்' என்றனன். இங்ஙனம் நிகழ்ந்துகொண்டிருக்கையில் இராமனது நண்பர்கள் பலர் இந்த மங்கலச் செய்தியையறிந்து மகிழ்ந்து விரைந்தோடிச் சென்று கௌஸல்யைக்குத் தெரிவித்தனர். அவள் அது கேட்டு அதனைக் கூறினவர்கட்கு முத்தும் மணியும் பொன்னும் பசுவும் பரிசாக வழங்கினள். இராமன் தந்தையிடம் விடைபெற்றுக்கொண்டு தன்னிருப்பிடம் வந்து சேர்ந்தனன். நகரவாஸிகள் யாவரும் நடைபெற விருக்கும் மங்கலகாரியத்தை நோக்கி உள்ளம் பூரித்து, இஃது இடையூறின்றி யீடேற வேணுமென்று தத்தம் இஷ்ட தெய்வங்களுக்கு வழிபாடு செய்தனர்.

### தசரதன் மறுபடியும் இராமனை வரவழைத்து, தான் தீய கனாக்கள் கண்டமை கூறி மகுடாபிஷேகத்திற்கு விரைவுறுத்துதல்.

தசரதமன்னவன் மறுபடியும் மந்திரிகளுடன் கலந்து ஆலோசித்து இனிச் சிறிதும் தாமதமின்றி இராமனுக்கு முடிசூட்டவேணுமென்று நிச்சயித்தனன். மறுபடியும் இராமனைத் தன்னிடம் அழைத்துவரும்படி ஸுமந்திரர்க்கும் கட்டளையிட்டனன். அவரும் இராமனிடம் சென்று தந்தைகட்டளையைத் தெரிவிக்க, 'மறுபடியும் இவ்வளவு சீக்கிரமாக என்னையழைப்பதற்கு யாது காரணம்?' என்று இராமன் கேட்க; 'அது எனக்குத் தெரியுமோ? தந்தையிட்ட கட்டளை இது' என்று சுமந்திரர் சொல்ல, உடனே இராமன் அரசனது மாளிகைக்குச் சென்றனன். அப்போது மன்னவன் இராமனை ஆஸனத்தில் அமர்த்தி, 'ராமா! நான் பெருங்கிழவனாய் விட்டேன்; விரும்பின போகங்களையெல்லாம் இனிது அனுபவித்தேன்; பல பல வேள்விகளையும் பாங்காகச் செய்து முடித்தேன்; ஸகல விதத்திலும் நான் க்ருதக்ருத்யனாயிருக்கின்றேன்; உனக்கு மகுடாபிஷேகம் செய்விப்பதொன்றே இனி நான் செய்யத்தக்கதாகவுள்ளது. உனக்கு நான் யாது சொல்வேனோ அதை நீ தவறாது செய்து முடிக்கவேண்டும். நீயே அரசனாக வரவேண்டுமென்கிற விருப்பமோ குடிமக்களுக்குக் குறையறவுள்ளது. ஆகவே நீ முடிசூட வேண்டியது மிக அவசியம். எற்கெனவே உன்னையழைத்து இவ்விஷயத்தைத் தெரிவித்திருக்கின்ற யான் இப்போது மறுபடியும் அழைத்துச் சொல்லுவானேன்? எனில், இப்போது எனது கனவில் பயங்கரமான பல அமங்கலக்குறிகள் புலப்பட்டுக்கொண்டிருக்கின்றன. எனது ஜாதகநீதியிலும் சில கெடுதல்கள் இருப்பதாகச் சோதிடர் சொல்லுகின்றனர். இவற்றின் பலனாக எனக்கு மரணமோ அல்லது பெருத்த ஆபத்தோ நேருமென்று தெரிகின்றது. ஆகையால் உனக்கு முடிசூட்டவேணுமென்கிற கருத்து மிக விரைவில் நிறைவேற வேண்டும். மனிதர்களின் புத்தி நிலையற்றதாய் நிமிஷந்தோறும் மாறுகின்றதன்றோ? தாமதம் செய்வதனால் என்ன இடையூறு நேருமோவென்று அஞ்சவேண்டியிருக்கிறது. இன்று புனர்வஸு நக்ஷத்திரம். நாளை தவறாது நீ முடிசூடியாகவேண்டும். அதற்காக இன்று நீ மனைவியுடன் உபவாஸமிருக்கவேண்டும். நிலத்தில் தர்ப்பங்களைப் பரப்பி அதன்மீது படுத்துக்கொள்ளவேண்டும். நல்ல காரியங்களுக்கு இடையூறு மிடைதருமாதலால் பலவகையிலும் இன்று நீ நண்பர்களின் பாதுகாவலிலேயே யிருக்கவேண்டும். அன்றியும், தேசாந்தரம் சென்றிருக்கின்ற பரதன் இங்கு மீண்டுவருவதற்கு முன்னமே $ இம்முயற்சி முடிவுபெற வேண்டுமென்பதும் எனது கருத்து. பரதன் ஒப்புயர்வற்ற குணங்கள் படைத்தவனும் உன்னிடத்தில் அந்தரங்கமான அன்புபூண்டவனுமாயிருப்பவன் என்பதில் ஐயமில்லை. ஆயினும் ஸாமான்யமாக மனிதர்களின் மனம் நிலையற்றிருக்குமென்றே எனது நினைவு. ஒரு காரியம் நடப்பதற்குமுன்பு அதைத்தடைசெய்யவேண்டிய அவசியமிருந்தாலும், அது நடந்து முடிந்துவிட்டதாயின் அதனை உகந்திருப்பதே $$ ஸத்துக்களின் செயலாகும்; ஆகவே உனக்கு மகுடாபிஷேகம் முடிந்துவிடுமாயின் பிறகு பரதன் வந்தாலும் அதற்கு உகந்தே யிருப்பன். ஆதலால் விரைவில் முடிசூடுதல் நிறைவேறுமாறு பார்ப்பாயாக' என மொழிந்து விடைதந்தனுப்பினன்.



---

$ தசரத மன்னவன் கைகேயியை மணம்புணரும்போது 'இவள் வயிற்றில் பிறக்கும் பிள்ளைக்கு இராச்சியங் கொடுக்கிறேன்' என்று கேகய ராஜனிடத்தில் உறுதி கூறியுள்ளானென்பது மேலே நூற்றேழாவது ஸர்க்கத்தில் உள்ளது. அதனால், பரதன் வந்தால் ராஜ்யத்தை அவனுக்குக் கொடுக்கவேண்டியிருக்குமோவென்று சங்கைகொண்டு மன்னவன் இங்ஙனம் மொழிகின்றானென்று பெரியோர் கூறுவர்.



$$ இவ்விடத்தில் வால்மீகி ராமாயண மூலச்லோகம் வருமாறு—ஸதாம் ஹி தர்ம நித்யானாம் க்ருதசோபி ச ராகவ! என்பது. இதற்குப் பலர் பலவகையாகப் பொருள் கூறுவர்.

ஸ்ரீரஸ்து.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஷஷ்டி பூர்த்தி நினைவு மாலை.

அன்பர்களே!, மேலே குறித்த பெயர் பூண்ட தமிழ்ச் சஞ்சிகை நாளது 1950ஸு ஜனவரிமீ முதல்தேதி ஆரம்பமாகி 1951ஸு ஏப்ரல்மீ வரையில் 16 மாதங்களில் 16 மலர்களாக வெளிவரும்படி ஏற்பாடு செய்திருக்கின்றது.

இச்சஞ்சிகையின் நோக்க மென்னவென்றால்;

நமது ஆசார்யரான ஸ்ரீகாஞ்சி, மஹாவித்வான் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகளுக்கு, அடுத்த விக்ருதிஸு பங்குனிமீ விசாக நக்ஷத்திரத்தில் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம் [அறுபதாண்டு நிறைவு விழா] ப்ராப்தமாயிருக்கின்ற தென்பது பலர்க்குத் தெரிந்திருக்கும். அந்த மஹோத்ஸவத்திற்குப் பூர்வாங்கமாக இந்நினைவு மாலை வெளியிடப்படுகின்றது. ஒவ்வொரு மாதத்திலும் முதல் தேதி தவறாமல் இச்சஞ்சிகை வெளிவரும்.

இதில் வெளிவரும் விஷயம் என்னவென்றால்;

நமது ஸ்வாமிகளால் வெகுகாலமாக வெளியிடப்பட்டு வரும் வியாக்கியானங்களில் சில பாகம் பூர்த்தியடையாமலிருக்கின்றன; சில முக்கியமான நூல்களுக்கு வியாக்கியானம் இன்னமும் வெளிவராமலிருக்கின்றன. இவ்விரண்டு குறைகளையும் தீர்த்துவிடவேணுமென்றே இச்சஞ்சிகை ஆரம்பமாகிறது.

நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களுக்கு நம் ஸ்வாமிகளின் திவ்யார்த்த தீபிகையுரை 3700 பாசுரங்களுக்குப் பூர்த்தியாய் வெளியாகி 300 பாசுரங்களுக்கு மாத்திரம் (அதாவது, திருவாய் மொழியில் 8,9,10 ஆகிய மூன்றுபத்துக்களுக்கு) உரை வெளிவ்ராமலிருக்கின்றது. பகவத்கீதை முதலத்யாயத்திற்கு மாத்திரம் விரிவுரை வெளிவந்து மற்ற 17 அத்யாயங்களுக்கு வெளிவராமலிருக்கின்றது. இப்படி குறையாயிருக்கின்றவைகளைப் பூர்த்தி செய்வது ஒன்று.

ஆசாரியர்கள் அருளிச்செய்த ஸ்தோத்ரங்களில் ஸ்ரீவைகுண்ட ஸ்தவம், ஸுந்தரபாஹுஸ்தவம், ஸ்ரீகுமாரத்ந கோசம் ஆகிய இவை களுக்கு வியாக்கியானமும், ரஹஸ்யங்களில் முக்கியமாக தத்வத்ரயத் திற்கும் ஆசார்ய ஹ்ருதயத்திற்கும் ப்ரதிபதார்த்தமான பதவுரையு மாகிய இவை வெளிவரவேண்டி யிருப்பதை வெளியிடுவது மற் றொன்று. இவற்றையெல்லாம் 1951ஹூ ஏப்ரல் மாதத்திற்குள் அச் சிட்டுப் பூர்த்தி செய்து பக்தர்களின் குறையைத் தீர்ப்பதற்காகவே இச் சஞ்சிகை வெளிவருகின்றது. ஸ்ரீராமாநுஜன் பத்ரிகை மூலமாகவும் சில நூல்கள் வெளிவந்து முடிவுபெறும்.

இது அறுபதாண்டுநிறைவு நினைவுமாலையாகையால் ஒவ்வொரு சஞ்சிகையிலும் சரியாய் 60 பக்கங்கள் டபுள் க்ரவுன் ஸைஜ் என்னும் பெரியவுருவத்தில் வெளிவரும். அவற்றில் ஸ்ரீஸ்வாமியின் வியாக்கியா னங்களே வெளியாகும். பல அச்சுக்கூடங்களில் வேலைகளைக்கொடுத் துக் காரியம் நடத்துகிறோமாகையால் ஆங்காங்கு முன்னாடி முடிந்து ஸித்தமாகிவருகிற பாரங்களைச் சேர்த்து ஸஞ்சிகைகள் வெளியிடு வோம். சேர்க்கப்படுகிற பாரங்கள் ஒரே நூலாகவும் ஒரே வரிசையாகவு மிருக்குமென்று சொல்லமுடியாது. 60 பக்கங்கள் என்கிற கணக்கு தவ றாமல்தேறும். ஸஞ்சிகைகள் முடிந்த பிறகு பாரங்களை யெடுத்து ஒவ் வொரு புத்தகமாகச் சேர்த்து பயின்டு செய்து கொள்வது. அப்படி பயின்டு செய்து கொள்வதற்கு அனுகூலமாகவே பாரங்களைக் கட் பண்ணாமலும் ஸஞ்சிகைகளைக் கனமாகத் தைக்காமலும் வெளியிட்டு வருவோம். 300 காபிகளே அச்சிடுவதால் முந்திக்கொள்வார்க்கே கிடைக்கும்.

ஸஞ்சிகை ஒன்றுக்கு விலை 1 ரூ. வெளியூரார்களுக்குத் தபால் செலவு வேறு. இது மதராஸிலும் காஞ்சிபுரத்திலும் கிடைக்கும். மதராஸில் கீழ்க்கண்ட விலாஸமுள்ள எம்மிடத்தில் கிடைக்கும். காஞ்சி புரத்தில் க்ரந்தமாலா ஆபிஸில் கிடைக்கும்.

15 தங்கசாலைத் தெரு,
P. T. மதராஸ்.
19—12—49

இப்படிக்கு
பண்டிட் P. R. வரதாசாரியன்.

| | | | |
|---|---|---|---|
| (யா) | யாதொரு காவிரியானது | ரங்கபதே: | அழகிய மணவாளனுடைய |
| அப்ரதிக்ரியம் அபி | ப்ராயச்சித்த யோக்யதைகூட இல்லாத | தயா இவ | திருவருள்போல |
| ஸ்திரத்ரஸம் ஸர்வம் | ஸ்தாவர ஜங்கமப் பொருள் களையெல்லாம் | ஜகத் தாத்ரீ பூத்வா | உலகுக்கெல்லாம் உபமாதாவாகி |
| அகணிதகுண அவத்யம் (யதாததா) | குணதோஷங்களை ஆராயாத படி | ப்ரவஹதி | வெள்ளமிடா நின்றதோ, |
| | | ஸா | அப்படிப்பட்ட |
| | | சிசிரமதுர அகாதா | குளிர்ந்தும் மதுரமாயும் ஆழமாயுமுள்ள |
| பய: பூரை: | ஜல ப்ரவாஹங்களாலே | மருத்வ்ருதா | காவேரியானது |
| ஆப்யாயயந்தி ஸதி | த்ருப்திபடுத்தா நின்றுகொண்டும் | ந: | நம்மை |
| அநு ஜாக்ரதி | கூடவே விழித்திரா நின்று கொண்டும் | புநாது | பரிசுத்தப்படுத்துக. |

* * *—ஸ்ரீரங்கநாதனுடைய கருணாரஸமே திருக்காவேரியாக உருவெடுத்துப் பெருகுகின்றதென்கிறார். பகவத்க்ருபை பெருகத் தொடங்கிவிட்டால் 'இன்னான் துஷ்டன், இன்னான் குணசாலி' என்று குணதோஷங்களை ஆராயாமல் ஸகல சராசரங்கள்மேலும் ஏறிப்பாய்ந்து போஷிக்குமிறே; திருக்காவேரியும் அப்படியே குணதண நிருபணம் பண்ணாமல் ஸ்தாவரஜங்கமப்பொருள்களெல்லாவற்றிலும் பாய்ந்து செழிப்பை யுண்டுபண்ணுகின்றது. சிசுக்களை முலைப்பால் கொடுத்து வளர்க்கும் தாய் போன்றிருத்தல் பகவத் க்ருபைக்கும் காவேரிக்கும் ஒக்கும். குளிர்ந்து மதுரமாய் கம்பீரமாயிருக்குந் தன்மைகளும் ஒக்கும். ஆக இப்படிகளாலே பகவத்க்ருபைக்குப் போலியாயிருக்கின்ற திருக்காவேரி நம்மைப் புனிதமாக்கவேணு மென்றாராயிற்று.

அப்ரதிக்ரியமபி=ப்ரதீகாரமாவது-தோஷங்களுக்குப் பரிஹாரம்பெற யோக்யமாயிருத்தல். "சரீரஜை: கர்மதோஷை: யாதி ஸ்தாவரதாம் நர:" [உடம்பினால் செய்யும் பாபங்களின் பலனாக ஸ்தாவரஜன்மம் உண்டாகின்றது] என்று சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறபடியே காயிக பாபங்களுக்குப் பலனாகக் கல்லாகவும் மரமாகவும் ஸ்தாவரப்பிறவிகள் பெற்றிருக்குமவற்றுக்கு வேறொரு ப்ரதீகார மில்லையிறே. அவையும் காவேரீ தீர்த்த மஹிமையினால் உஜ்ஜீவிக்கக் குறையில்லை யென்கிறது.

அநுஜாக்ரதீ=முலைப்பால் கொடுக்குந்தாய் குழந்தையுடன் கூடவே விழித்துக் கொண்டிருப்பள்; பகவத்க்ருபையும் ஓயாதே உறங்காதேயிருந்து காரியம் செய்யும். திருக்காவேரியும் வெள்ளங்கோந்தபடியே யிருக்கும்.

மருத்வ்ருதா=காற்றடிக்க வடிக்கக் காவிரிநீர்ப்பெருக்கு அபிவ்ருத்தியடையுமாதலால் மருத்வ்ருதா என்று இப்பெயராயிற்று. ... .... .... (23).

तरलतनुतरङ्गैर्मन्दमान्दोल्यमान स्वतटविटपिराजीमञ्जरीसुसभृङ्गा ।
क्षिपतु कनकनाम्नी निम्नगा नारिकेल क्रमुकजमकरन्दैः मांसलापा मदंहः ॥२४॥

தரளதநுதரங்கைர் மந்தமாந்தோள்யமாந
ஸ்வதடவிடபிராஜீ மஞ்ஜரீஸுப்தப்ருங்கா,
க்ஷிபது கநகநாம்நீ நிம்நகா நாரிகேள
க்ரமுகஜமகரந்தைர் மாம்ஸலாபா மதம்ஹ: 24

| | | | |
|---|---|---|---|
| தரள தர தரங்கை: | சஞ்சலமாயும் சிறிதாயுமிருக்கிற அலைகளாலே | நாளிகேர க்ரமுகஜ மகரந்தை: | தெங்குகளில் நின்றும் பாக்குகளில் நின்று முண்டான மகரந்தங்களினால் |
| மந்தம் | மெல்ல | மாம்ஸலாபா | நிரம்பிய நீரை யுடையதான |
| ஆந்தோள்ய மாந | அலைக்கப்படா நின்ற | கநக நாம்நீ | பொன்னியென்கிற |
| ஸ்வதடவிடபி ராஜீ- | தன்கரையிலுள்ள சோலைகளினுடைய | நிம்நகா | (காவேரீ) நதியானது |
| மஞ்ஜரீ- | பூங்கொத்துகளிலே | மத் அம்ஹ: | என்னுடைய பாபத்தை |
| ஸுப்த- | உறங்குகின்ற | க்ஷிபது | தொலைத்திடுக. |
| ப்ருங்கா | வண்டுகளையுடையதும் | | |

* * *—காவிரியின் கரையிலே பல சோலைகள் உள்ளன; காவிரியின் சிறிய அலைகள் அச்சோலைகளிலே சென்று மோத, அதனால் பூங்கொத்துகளிலே வண்டுகள் இனிதாகக் கண்வளர்கின்றனவாம். அன்றியும், தெங்கு கமுகு முதலியவற்றில் நின்றும் பெருகின மதுவெள்ளமும் காவிரியில் சேர்ந்து வெள்ளம் இரட்டித்திருக்கின்றதாம். இப்படிப்பட்ட திருக்காவேரி என் பாபங்களைப் போக்கவேணுமென்றாராயிற்று.

கநகநாம்நீ—காவேரியானது "பொன்னும் பொன்னி கொணர்ந்தலைக்கும்" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரப்படியே பொன்களைக் கொழித்துக்கொண்டு பெருகுவதனால் தமிழில் பொன்னி யென்று பெயர் பெறும்; அதுபற்றி 'கநகநாம்நீ' எனப்பட்டது. 'ஹேமாபகா' என்றதும் இதுபற்றியே. .... ... (24)

कदलवकुल जम्बूपूगमाकन्दकण्ठ द्वयससरसनीरामन्तरा सह्यकन्याम् ।
प्रबलजलपिपासालम्बमानाम्बुदौघ भ्रमकरतरुबृन्दं वन्द्यतामन्तरीपम् ॥२५॥

கதளவகுள ஜம்பூபூகமாகந்தகண்ட த்வயஸஸரஸநீராமந்தரா ஸஹ்யகந்யாம்,
ப்ரபலஜலபிபாஸா லம்பமாநாம்புதௌக ப்ரமகரதருப்ருந்தம் வந்த்யதாமந்தரீபம். 25

| | | | |
|---|---|---|---|
| கதள- | வாழைமரங்களென்ன | ஸஹ்யகந்யாம் அந்தரா | காவேரியின் நடுவே, |
| வகுள- | மகிழ்மரங்களென்ன | ப்ரபல ஜல பிபாஸா | அதிகமான தாஹத்தினால் |
| ஜம்பூ- | நாவல்மரங்களென்ன | லம்பமாந- | கீழேயிறங்கி யிருக்கின்ற |
| பூக- | பாக்குமரங்களென்ன | அம்புத ஓக | மேகஸமூஹத்தினுடைய |
| மாகந்த- | தேன்மாமரங்களென்ன இவற்றினுடைய | ப்ரமகர- | ப்ரமத்தை யுண்டுபண்ணுகின்ற |
| கண்டத்வயஸ | கழுத்தளவாகவுள்ளதும் | தருப்ருந்தம் | சோலைகளை யுடைத்தான |
| ஸரஸ- | மாதுர்யத்தோடுகூடினதுமான | அந்தரீபம் | தீவானது |
| நீராம் | தீர்த்தத்தை யுடைத்தான | வந்த்யதாம் | வணங்கப்படட்டும். |

* * *—கீழ் ஐந்து ச்லோகங்களாலே திருக்காவேரியை வருணித்துப் பேசினாராய், "திடர்விளங்கு கரைப்பொன்னி நடுவுபாட்டுத் திருவரங்கம்" என்கிறபடியே திருக்காவிரியின் இடைத்தீவாகிய ஆராமஞ் சூழ்ந்த வரங்கத்தைப் பேசுகிறார் மேலிரண்டு ச்லோகங்களாலே.

வாழை, மகிழ், நாவல், கமுகு, தேன்மா முதலிய மரங்களின் கழுத்தே கட்டளையாக வெள்ளமிட்டிரா நின்ற திருக்காவேரியினிடையே [உபய காவேரீ மத்யத்திலே], 'அளவற்ற தாஹத்தினால் தண்ணீர் குடிக்கவந்து கழுத்தளவும் தண்ணீர்குடித்து நகரமாட்டாமல் தொங்குகின்ற மேகங்களோ இவை!' என்று ப்ரமிப்பதற்குரிய வ்ருக்ஷ ஸமூஹங்களை யுடைத்தான த்வீபத்தை வணங்குமின்.

கழுத்தளவும் தண்ணீரில் அமிழ்ந்திருக்கின்ற மரங்களானவை மேலே தலையுமிலையும் கப்பும் கிளையுமான பாகங்கள் மாத்திரமே கண்ணுக்குத் தோற்றும்படி யிருப்பதாலும் அவை கறுத்துத்தோற்றுவதாலும் காளமேகங்களோடு ஒப்பிட்டுக் கூறப்பட்டன.

இங்கு "ஜலபிபாஸாலம்பமாநாம்புத" என்றது 'நீர் பருகுவதற்காக வந்த மேகங்கள்' என்று பொருள்படுதலால் அந்த மேகங்கள் வெண்ணிறமாகவே யிருக்குமாதலால் அவை பச்சிலை மரங்களுக்கு எங்ஙனே உவமையாகும்? என்று சிலர் சங்கிப்பர்; நீர் கொண்டெழுந்த காளமேகங்களே இங்கு விவக்ஷிதம்; மூலத்தில் "பிபாஸாலம்பமாந" என்றது என்னெனில்; மேகங்கள் காவேரிக்கரையில் வருவதற்குக் காரணம் கூறினவத்தனை. விடாயைத் தீர்த்துக்கொள்ள வந்தனவென்கை. வந்து விடாய் கெட நீர் பருகின மேகங்களே இங்கு விவக்ஷிதம். ... .... ... ... (25)



यद्विष्णोः पदमतमः परोरजोऽग्र्यं मुक्तानामनुविरजं विदीप्रमाहुः ।
तत्पुण्यं पुलिनमिदन्तयाऽद्य मध्येकावेरि, स्फुरति तदीक्षिषीय नित्यम् ॥२६॥

யத் விஷ்ணோ: பதமதம: பரோரஜோக்ர்யம் முக்தாநாமநுவிரஜம் விதீப்ரமாஹு:,
தத் புண்யம் புளிநமிதந்தயாத்ய மத்யேகாவேரி ஸ்புரதி ததீக்ஷிஷீய நித்யம். 26

| | | | |
|---|---|---|---|
| அநுவிரஜம் | விரஜா ஸமீபத்திலே | புளிநம் | (விரஜாநதியின்) மணற்குன்றானது |
| அதம: | தமோகுணமற்றதும் | அத்ய | இந்த ஸம்ஸாரதசையிலும் |
| பரோரஜ: | ரஜோகுணமற்றதும் | இதந்தயா | 'இதம்' என்று ப்ரத்யக்ஷமாகக் காட்டலாம் படியாய் |
| அக்ர்யம் | ச்ரேஷ்டமுமான | மத்யேகாவேரி | திருக்காவிரியின் இடையே |
| யத் விஷ்ணோ: பதம் | யாதொரு பரமபதத்தை | ஸ்புரதி | விளங்காநின்றது; |
| முக்தாநாம் விதீப்ரம் ஆஹு: | முக்தர்களுக்கு விளங்குமதாக (வைதிகர்கள்) சொல்லுகின்றனரோ, | தத் | அப்படிப்பட்ட இவ்விடத்தை |
| தத் | அந்த | நித்யம் | இடைவிடாமல் |
| புண்யம் | பவித்திரமான | ஈக்ஷிஷீய | கண்டுகொண்டிருக்கக்கடவேன். |

* * *—விரஜா நதியின் கரையிலே, ரஜஸ்தமோ குணங்களுக்கு எட்டாததாய் மிகச் சிறந்ததாய் நித்ய முக்தர்களுக்கு ஸ்வயம் ப்ரகாசமான யாதொரு பரமபத மிருப்பதாக வைதிகர்கள் ஓதுகின்றனரோ, அப்படி பரிசுத்தமான விரஜையினது மணற்குன்றென்னலாம் படியான அந்தப்பரமபதமே இப்போது திருக்காவேரியினிடையே மாம்ஸசக்ஷுஸ்ஸுக்கும் விஷயமாய்க்கொண்டு விளங்காநின்றது; இந்த காவேரீ த்வீபத்தை நான் ஸதாபச்யந்தி பண்ணக்கடவேன். ... ... ... ... (26)



त्र्यन्तप्रहतिमतीषु वैष्णवानां प्राप्यासु प्रचुरभवश्रमापहासु ।
कावेरीपरिचरितासु पावनीषु श्रीरङ्गोपवनतटीषु वर्तिषीय ॥२७॥

த்ரய்யந்தப்ரஹதிமதீஷு வைஷ்ணவாநாம், ப்ராப்யாஸு ப்ரசுரபவச்ரமாபஹாஸு,
காவேரீபரிசரிதாஸு பாவநீஷு ஸ்ரீரங்கோபவநதடீஷு வர்த்திஷீய. 27

| | | | |
|---|---|---|---|
| த்ரய்யந்தப்ரஹதிமதீஷு | உபய வேதாந்தங்களின் நிரந்தரமான அப்யாஸங்களையுடையவையாயும் | ப்ராப்யாஸு | புகலிடமாயும் |
| ப்ரசுர- | ப்ரபலமான | காவேரீ பரிசரிதாஸு | காவிரியானது (அலைக்காற்று முதலிய வற்றால்) கிஞ்சித்கரிக்கப் பெற்றவையாயு மிருக்கிற |
| பவ ச்ரம- | ஸம்ஸாரதாபங்களை | | |
| அபஹாஸு | ஆற்றுமவையாயும் | ஸ்ரீரங்க உபவந தடீஷு | கோயிற்சோலைப் புறங்களிலே |
| பாவநீஷு | பரிசுத்தங்களாயும் | | |
| வைஷ்ணவாநாம் | ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு | வர்த்திஷீய | வாழக்கடவேன். |

* * *—இது பரமபதமாகில் * ஏதத் ஸாம காயந்நாஸ்தே * என்கிறபடியே இங்கு ஸாமகாநம் நடக்கிறதோ வென்ன, அதற்கொரு குறையில்லை யென்கிறது; [த்ரய்யந்த ப்ரஹதிமதீஷு] ஸம்ஸ்க்ருத த்ராவிட ஸ்ாமகோஷம் நித்யமாய்ச் செல்லா நின்றதிங்கு. ப்ரஹதியாவது இடைவிடாதே ஓதுகை. [வைஷ்ணவாநாம் ப்ராப்யாஸு] இவ்விடத்து வாழ்ச்சியையே வாழ்ச்சியாகப் பேணினார்களிறே ஆழ்வார்கள். ஸ்ரீவைஷ்ணவர்கட்குப் புகலிடம் இதுவாயிருக்கும். [ப்ரசுர பவ ச்ரமாபஹாஸு] நதீமத்யத்தில் அவகாஹித்தால் தேஹதாபமொன்றே தீரும்; இங்கு தாபத்ரயமும் தீருமிறே. [காவேரீ பரிசரிதாஸு] திருக்காவேரி தான் தனது அலைக்காற்றுகளாலே சிசிரோபசாரங்கள் செய்யாநிற்குமே. இப்படிப்பட்ட பரமபவித்ரங்களான திருவரங்கத்தின் புறச்சோலைகளிலே வர்த்திக்கக் கடவே னென்றாராயிற்று. ... ... .... (27)

स्फुरितशफरदीर्यन्नालिकेरीगुलुच्छ प्रस्नमरमधुकुल्यावर्धितानोकहानि ।
रतिमविरति रङ्गारामरम्यस्थलानि क्रमुकपनसमोचामेचकानि क्रियासुः ॥ २८ ॥

ஸ்புரிதசபரதீர்யந்நாளிகேரீ குளுச்ச, ப்ரஸ்ருமரமதுகுல்யாவர்த்திதாநோகஹாநி;
ரதிமவிரதி ரங்காராமரம்யஸ்தலாநி, க்ரமுகபநஸமோசாமேசகாநி க்ரியாஸு: 28

| | | | |
|---|---|---|---|
| ஸ்புரித சபர தீர்யத் | துள்ளிப்பாய்ந்த மீன்கள்பட்டு உடைந்த | பநஸ- | பலாமரங்களென்ன |
| நாளிகேரீ குளுச்ச- | தென்னங் குலைகளினின்றும் | மோசா- | வாழைமரங்களென்ன |
| | | | (ஆகிய இவற்றால்) |
| | | மேசகாநி | கறுத்திருப்பவையுமான |
| ப்ரஸ்ருமர- | பெருகின | ரங்க ஆராம ரம்ய ஸ்தலாநி | கோயிலைச் சேர்ந்த ஆராமங் களின் அழகிய நிலங்கள் |
| மது- | இளநீர் நிறைந்த | | |
| குல்யா- | வாய்க்கால்களினால் | அவிரதி | இடைவீடின்றி |
| வர்த்தித- | போஷிக்கப்பட்ட | ரதிம் | மகிழ்ச்சியை |
| அநோகஹாநி | மரங்களையுடையனவும் | க்ரியாஸு: | செய்யக்கடவன. |
| க்ரமுக- | பாக்குமரங்களென்ன | | |

* * *—ஆராமஞ்சூழ்ந்த வரங்கமாகையாலே ஆராமங்களை யநுபவித்துப் பேசுகிறார். திருக்காவேரியிலுள்ள பெருமீன்கள் துள்ளித்துள்ளி யெழும்பித் தென்னங்குலைகளின்மேற் பாய, அதனால் காய்கள் உடைந்து இளநீர்கள் பெருகி வாய்க்காலாக ஓட, அதனால் மரங்கள் செழித்து வளர்கின்றனவாம்; அப்படிப்பட்ட பாக்கு, பலா, வாழை முதலிய மரங்கள் செறிந்து பசுகு பசுகென்றிரா நின்ற திருவரங்கச் சோலைப்புறங்கள் நம்மை மகிழ் விக்கக் கடவன வென்கை. ... ... .... (28)

अधिपरमपदं पुरीमयोद्ध्याम् अमृतवृतामपराजितामुशन्ति ।
पुलिनमुपरि रङ्गराजधानी पिशितदृशामपि सा पुरश्चकास्ति ॥ २९ ॥

அதிபரமபதம் புரீமயோத்யாம் அம்ருதவ்ருதாமபராஜிதாமுசந்தி.
புளிநமுபரி ரங்கராஜதாநீ பிசிதத்ருசாமபி ஸா புரச் சகாஸ்தி. 29

| | | | |
|---|---|---|---|
| அதிபரமபதம் | பரமபதத்திலே, | உசந்தி | (உள்ளதாக வைதிகர்கள் சொல்லுகிறார்களோ, |
| அம்ருத வ்ருதாம் | விரஜா தீர்த்தத்தால் சூழப் பட்டதாய் (அல்லது) நித்ய முக்த ஸமூஹபரிவ்ருதமாய் | ஸா | அந்த திவ்ய நகரியானது |
| | | ரங்கராஜதாநீ | ஸ்ரீரங்கநகரியாகி |
| அயோத்யாம் | 'அயோத்யா' என்று பெய ருடையதாய் | புளிநம் உபரி | காவேரீ ஸைகதத்திலே |
| | | பிசிதத்ருசாம் அபி | மாம்ஸக் கண்ணினரான நம் போலியர்க்கும் |
| அபராஜிதாம் | 'அபராஜிதா' என்று பெய ருடையதாய் | புர: | கண்ணெதிரே |
| யாம் புரீம் | யாதொரு பட்டணத்தை | சகாஸ்தி | விளங்குகின்றது. |

* * *—* யோவைதாம் ப்ரஹ்மணோ வேத, அம்ருதேநாவ்ருதாம்புரீம் * என்றும் * தேவாநாம் பூரயோத்யா * புரம் ஹிரண்யமயீம் ப்ரஹ்மா, விவேசாபராஜிதா * என்றும் வேதத்திற் சொல்லுகிறபடியே—அம்ருதமயமான விரஜாதீர்த்தத்தாலே சூழப்பட்டதாயும் 'அயோத்யா, அபராஜிதா' என்னுந் திருநாமங்களை யுடையதாயும் யாதொரு திவ்ய நகரம் பரமபதந் தன்னிலுள்ளதாக வைதிகர்களால் சொல்லப்படுகின்றதோ, அதுதானே இங்கே திருவரங்கமா நகராய்க்கொண்டு திருக்காவிரியின் மணற்குன்றிலே மாம்ஸசக்ஷுஸ்ஸுக்களான நம்போலியர்க்கும் கண்ணெதிரே விளங்காநின்ற தென்கை. (29)

भवपदमपि दिव्यधाम कर्तुं तदुभयतन्त्रित हर्म्यमालिकेव ।
भवनमणितलैर्विजृम्भमाणा जयतितरामिह रङ्गराजधानी ॥ ३० ॥

பவபதமபி திவ்யதாம கர்த்தும் தது பயதந்த்ரிதஹர்ம்யமாலிகேவ,
பவநமணிதலைர் விஜ்ரும்பமாணா ஜயதிதராமிஹ ரங்கராஜதாநீ. 30

| | | | |
|---|---|---|---|
| பவபதம் அபி | ஸம்ஸார மண்டலத்தையும் | பவந மணிதலை: | திருமாளிகைகளின் மணித்தலங்களினால் [-ரத்னங்களிழைத்தமேல் தளங்களினால்] |
| திவ்யதாம | நித்யவிபூதியாக | விஜ்ரும்பமாணா | வ்ருத்தியடையாநிற்கிற |
| கர்த்தும் இவ | பண்ணுவதற்குப்போல | ரங்கராஜதாநீ | திருவரங்கமாநகர் |
| தத் உபய தந்த்ரித– | அவ்வுபயவிபூதிகளிலும் ஒருங்கே ஸம்பந்திக்கப்பெற்ற | இஹ | இவ்விபூதியில் |
| ஹர்ம்ய மாலிகா | மாடமாளிகைத் திரள்களை யுடைத்தாய்க் கொண்டு | ஜயதிதராம் | மிகவும் சீர்மைபெற்றிருக்கின்றது. |

* * *—திருவரங்கத்திலுள்ள திருமாளிகைகளின் மாடங்கள் விண்ணளவும் வீங்கி ஓங்கியிருக்கையாலே, இந்த லீலா விபூதியையும் நித்யவிபூதியாக்குவதற்குப் பரமபதத்தை யளாவுகின்றதோ! என்னும்படி விளங்காநின்ற தென்கிறார். ... (30)

मणिमकररुचीर्वितत्य पाशान् विसमरकेतुकरैर्मृगं हिमांशोः ।
श्रिय इव नवकेलये जिघृक्षुः सुखयति रङ्गपुरी चकासती नः ॥ ३१ ॥

மணிமகரருசீர் விதத்ய பாசாந் விஸ்ருமரகேதுகரைர் ம்ருகம் ஹிமாம்சோ:,
ச்ரிய இவ நவகேளயே ஜிக்ருக்ஷு: ஸுகயதி ரங்கபுரீ சகாஸதீ ந:. 31

| | | | |
|---|---|---|---|
| மணி மகரருசீ: | ரத்நமயங்களான மகரதோரணங்களின் காந்திகளை | நவ கேளயே | அபூர்வமான விளையாட்டிற்காக |
| பாசாந் | வலைக்கயிறாக | ஜிக்ருக்ஷு: இவ | பிடிக்கவிரும்பினது போல |
| விதத்ய | பரப்பி | சகாஸதீ | விளங்காநின்றுள்ள |
| விஸ்ருமரகேது கரை: | மேலேபரவியிருக்கின்றத்வஜங்களாகிறகைகளினால் | ரங்கபுரீ | திருவரங்கமாநகர் |
| ஹிமாம்சோ: | சந்திரனுடைய | ந: | (சப்தாதி விஷயப்ரவணரான) நம்மையும் |
| ம்ருகம் | மானை | ஸுகயதி | மகிழ்விக்கின்றது. |
| ச்ரிய: | பெரியபிராட்டியாருடைய | | |

* * *—கோயில் திருவீதிகளில் ரத்நப்ரசுரங்களான மகரதோரணங்கள் கட்டப்பட்டுள்ளன; அவற்றின் கிரணங்கள் கயிறு கயிறாக மேலே திகழ்வதைப் பார்த்தால், ஸ்ரீரங்கபுரியாகிற ஒரு காமினியானவள் மேலே அலைகின்ற த்வஜங்களாகிற கைகளினால் மகரதோரண கிரணங்களாகிற வலைகளை வீசி சந்திரனது மடியிலுள்ள மான்குட்டியைப் பெரியபிராட்டியாரின் லீலார்த்தமாகப் பிடிக்க விரும்புகின்றனளோ! என்னலாம்படியிருக்கின்றதாம்.

சந்திரமண்டலத்தினிடையே கறுத்துத் தோன்றுவதை மான்குட்டியென்று சிலரும் மற்றும் பலர் பலவிதமாக உல்லேகிப்பதுண்டு; மான்குட்டியென்கிற ஸமாதி இங்குக் கொள்ளப்பட்டது. "ஸுகயது" என்றபாடம் மிகவழங்கும். ... .... ... (31)

जनपदसरिदन्तरीपपुष्यत् पुरपरिपालननित्यजागरूकान् ।
प्रहरणपरिवारवाहनाढ्यान् कुमुदमुखान् गणनायकान्नमामि ॥ ३२ ॥

ஜநபதஸரிதந்தரீபபுஷ்யத் புரபரிபாலநநித்யஜாகரூகாந்,
ப்ரஹரணபரிவாரவாஹநாட்யாந் குமுதமுகாந் கணநாயகாந் நமாமி. 32

| | | | |
|---|---|---|---|
| ஜநபத- | ஜநங்களுக்கு வாஸஸ்தாநமாய்க்கொண்டு | ப்ரஹரண- | ஆயுதங்களோடும் |
| ஸரித் அந்தரீப- | காவேரீத்வீபத்திலே | பரிவார- | பரிஜநங்களோடும் |
| புஷ்யத்- | வளர்கின்ற | வாஹந- | வாஹநங்களோடும் |
| புர- | ஸ்ரீரங்கநகரத்தை | ஆட்யாந் | கூடினவர்களாயுமிருக்கிற |
| பரிபாலந- | காப்பதில் | குமுதமுகாந் | குமுதன்முதலிய |
| நித்ய ஜாகரூகாந் | இடைவிடாது நோக்கமுடையவர்களாயும் | கணநாயகாந் | கணநாதர்களை |
| | | நமாமி | வணங்குகிறேன். |

* * *—நகரபரிபாலகர்களான குமுதன், குமுதாக்ஷன், புண்டரீகன், வாமநன், சங்குகர்ணன், ஸர்ப்பநேத்ரன், ஸுமுகன், ஸுப்ரதிஷ்டிதன் என்னும் கணாதிபதிகளை வணங்கும் முகத்தாலே அவர்களுடைய நியமனம் பெறுகிறார். அவர்களை ஆயுதங்களோடும் பரிஜநங்களோடும் வாஹனங்களோடுங்கூட வணங்கினாராயிற்று. ... .... (32)

अहृतसहजदास्यास्सूरयः स्रस्तबन्धाः विमलचरमदेहा इत्यमी रङ्गधाम ।
महितमनुजतिर्यक्स्थावरत्वाः श्रयन्ते सुनियतमिति हस्म प्राहुरेभ्यो नमः स्तात् ॥३३॥

அஹ்ருதஸஹஜதாஸ்யாஸ் ஸூரயஸ் ஸ்ரஸ்தபந்தா:
விமலசரமதேஹா இத்யமீ ரங்கதாம,
மஹிதமநுஜதிர்யக்ஸ்தாவரத்வா: ச்ரயந்தே
ஸுநியதமிதி ஹஸ்ம ப்ராஹுரேப்யோ நமஸ் ஸ்தாத். 33

| | | | |
|---|---|---|---|
| அஹ்ருத ஸஹஜ தாஸ்யா: | இயற்கையான சேஷத்வம் குன்றாத | மஹித - மநுஜ திர்யக் ஸ்தாவரத்வா: ஸந்த: | மானிடப்பிறவியையும் பசு பக்ஷிப் பிறவியையும் ஸ்தாவரப் பிறவியையும் விரும்பினவர்களாய்க்கொண்டு |
| ஸூரய: | நித்யஸூரிகளும், | ரங்கதாம | ஸ்ரீரங்கத்தை |
| ஸ்ரஸ்த பந்தா: | ஸம்ஸாரபந்தம் கழலப்பெற்ற முக்தர்களும் | ஸுநியதம் | எப்போதும் |
| விமல சரம தேஹா: | பாவங்களெல்லாம் தொலைந்து 'இனிமேல் தேஹஸம்பந்தமில்லை' யென்னலாம்படி முடிவான தேஹமுடையவர்களான முமுக்ஷுக்களும் | ச்ரயந்தே | பற்றியிருக்கிறார்கள் |
| | | இதி ஹ ப்ராஹு: ஸ்ம | என்று பௌராணிகர்கள் சொல்லி வைத்தார்கள்; |
| | | ஏப்ய: | இப்படிப்பட்ட மநுஷ்யதிர்யக் ஸ்தாவரங்களின் பொருட்டு |
| இதி அமீ | ஆகிய இவர்கள் | நம: | நமஸ்காரம் |
| | | ஸ்தாத் | ஆகுக. |

* * *—கோயிலிலுள்ள மநுஷ்யர்களையும் பசு பக்ஷிகளையும் கல்மரம் முதலியவற்றை ஸாமாந்யமாக அந்நந்த வஸ்துக்களாகவே பெரியோர் பிரதிபத்தி பண்ணமாட்டார்கள்; ஸூரிகளும் முக்தர்களும் முமுக்ஷுக்களும் இங்ஙனே மநுஷ்யதிர்யக் ஸ்தாவரங் வடிவெடுத்து வாழ்வதாகவே ப்ரதிபத்திபண்ணுவர்கள். அங்ஙனமே இவரும்

ப்ரதிபத்தி பண்ணித் திருவரங்கத்திலுள்ள ஸ்தாவர ஜங்கமப்பொருள்களை யெல்ல வணங்குகிறாரிதில்.

நான்காமடியில் "இதி யே ஸ்ம ப்ராஹு:" என்ற பாடம் ;பெரும்பான்மை வழங்கும் ; ஸம்ஸ்க்ருதவ்யாக்யாதாவும் அப்பாடத்தை ஆதரித்தார். "நித்யமுக்த முமுக்ஷுக்களே கோயிலில் ஸ்தாவரஜங்கமங்களாக வடிவெடுத்திருப்பதாய் யார் சொன்னார்களோ அவர்களுக்கு நமஸ்காரம்" என்று அப்போது பொருளாகும்.

"இதிஹஸ்ம ப்ராஹு:" என்ற பாடமே கற்றுணர்ந்த பெரியோர் ஸம்ப்ரதாயமாக அநுஸந்திப்பதாகும். இதிஹ—ஒரு முழுச் சொல்லான அவ்யயம்; ஐதிஹ்யமென்ற சொல் இதில் நின்றும் பிறந்ததாகும்.

நித்யஸூரிகள் ஒருநாளும் ஸம்ஸாரப்பற்று இன்றியே இயற்கையான கைங்கரியம் குன்றாதவர்களாதலால் 'அஹ்ருத ஸஹஜதாஸ்யா:' எனப்பட்டனர். முக்தரென்பார் சில நாள் வரையில் ஸம்ஸாரபந்த முள்ளவர்களாயிருந்து பிறகு அது கழலப்பெற்றவர்களாத லால் 'ஸ்ரஸ்தபந்தா:' எனப்பட்டனர். முமுக்ஷுக்களென்பார்-கீழ்க்கழிந்த காலங்களில் பலபல யோனிகளில் சரீர ஸம்பந்தம் பெற்றிருந்தாலும் 'இனி இவர்களுக்கு ஸம்ஸார பந்த ப்ரஸக்தியில்லை' என்னும்படியாக வுள்ளவராதலால் 'விமலசரம தேஹா:' எனப்பட் டனர். ஸூரியதம்—திண்ணம் என்றபடி. ... .... (33)

श्रीरङ्गदिव्यभवनं भुवि गोपुराणाम् प्राकारितेन निकरेण गरुत्मतेव ।
पार्श्वप्रसारितपतत्रपुटेन भक्त्या नानातनूभिरुपगूढमुपप्नयाम: ॥ ३४ ॥

ஸ்ரீரங்கதிவ்யபவநம் புவி கோபுராணம் ப்ராகாரிதேந நிகரேண கருத்மதேவ,
பார்ச்வப்ரஸாரிதபதத்ரபுடேந பக்த்யா நாநாதநூபிருபகூடமுபப்நயாம:. 34

| | | | |
|---|---|---|---|
| ப்ராகாரிதேந | (இருபக்கங்களிலும்) இரு மதிள்களைக் கொண்டிருக்கிற | பக்த்யா | பக்தியோடு |
| | | புவி | பூலோகத்தில் |
| | | நாநாதநூபி: | பலவடிவுகளைக் கொண்டு |
| கோபுராணம் நிகரேண | கோபுரங்களின் ஸமூஹத்தினாலே | உபகூடம் இவ ஸ்திதம் | மறைத்துக் காக்கப்பட்டது போன்றுள்ள |
| | (சூழப்பட்டிருப்பதைப் பார்த்தால்) | ஸ்ரீரங்க திவ்ய பவநம் | திருவரங்கம் பெரிய கோயிலை |
| பார்ச்வ ப்ரஸாரித பதத்ர புடேந | இரண்டுபக்கங்களிலும் விரிக்கப்பட்ட சிறகுகளையுடைய | உபப்நயாம: | பற்றுக்கோடாகக் கொள்ளுகிறோம். |
| கருத்மதா | பெரிய திருவடியினால் | | |

* * *—கீழ்ச்லோகத்தி லருளிச்செய்ததை ஒருவாறு மூதலிக்கிறாரிதில். நித்ய ஸூரிகளில் தலைவனான பெரிய திருவடிதான் பல வடிவுகள்கொண்டு திருக்கோபுரங்களாக வும் திருமதிள்களாகவும் கோயிலைக் காத்துக்கொண்டிருப்பதாக அருளிச்செ[illegible] * ஸ ஏகதா பவதி த்விதா பவதி த்ரிதா பவதி * என்று உபநிஷத்தில் ஓதியிருக்கிறபடி ஸூரிகள் கைங்கர்யார்த்தமாகப் பல வடிவுகள்கொள்ள சக்தியுடையராதலால் 'ந[illegible] என்றார். கோயிலில் பல திருக்கோபுரங்களுள்ளதுபற்றி இங்ஙனே சொல்ல[illegible] ஒவ்வொரு கோபுரத்தின் இரண்டு பக்க[illegible] திருமதிள்கள் பரம்பியிருப்பதை[illegible] தால் பெரிய திருவடி தனது சி[illegible] (கோபுரம்—கருடன் ; மதில்—சி[illegible]

உபக்நயாம:= [illegible]
எனப்படும் ; இச்ச[illegible]

प्राकार मध्याजिरमण्डपोक्त्या सद्वीपरत्नाकररत्नशैला ।
सर्वंसहा रङ्गविमानसेवाम् प्राप्तेव तन्मन्दिरमाविरस्ति ॥ ३५ ॥

ப்ராகாரமத்யாஜிரமண்டபோக்த்யா ஸத்வீபரத்நாகரரத்நசைலா,
ஸர்வம்ஸஹா ரங்கவிமாநஸேவாம் ப்ராப்தேவ தந்மந்திரமாவிரஸ்தி. 35

| | | | |
|---|---|---|---|
| (யத்) | யாதொரு ஸ்ரீரங்க மந்திரத்தில் | ஸர்வம்ஸஹா | பூமிப் பிராட்டியானவள் |
| ப்ராகார மத்ய அஜிர மண்டப உக்த்யா | திருமதிள்கள், இடைகழி, திரு மண்டபங்களென்னும் வியாஜத்தினால் | ரங்கவிமாந ஸேவாம் | ஸ்ரீரங்கவிமான ஸேவையை |
| | | ப்ராப்தா இவ | அடைந்தனள் போலும்; |
| | | தத் மந்திரம் | அந்த ஸ்ரீரங்கமந்திரம் |
| ஸத்வீப ரத்நாகர ரத்நசைலா | ஸப்தத்வீபங்களோடும் ஸப்த ஸாகரங்களோடும் மஹாமேருவோடுங்கூடின | ஆவிரஸ்தி | கண்ணெதிரே காட்சிதருகின்றது. |

* * *—ஸ்ரீரங்கமந்திரம் பூமிப்பிராட்டிபோன் றிருக்கிறதென்கிறார். ஸ்ரீரங்கவிமானத்தை ஸேவிப்பதற்காகப் பூமிப்பிராட்டி தன் பரிவாரங்களோடு இங்கு வந்துசேர்ந்திருக்கிறாள் போலும். கடல்களும் கடலிடைத்தீவுகளும் சிறந்த மலைகளும் பூமிப்பிராட்டியின் பரிவாரங்களாம். கோயிலைச்சுற்றி ஸப்தப்ராகாரங்கள் இருப்பது ஸப்தஸாகரங்களொக்கும்; ஒவ்வொரு திருமதிளுக்கும் இடையிலுள்ள அவகாசம் ஸப்தத்வீபங்கள்போலும். திருமண்டபங்கள் ரத்நபர்வதங்கள் போலும். ஆக இப்பரிவாரங்களுடனே பூமிப்பிராட்டி வந்து சேர்ந்து ஸ்ரீரங்க விமானஸேவையைப் பெற்றிருப்பதுபோல் மந்திரம் தோன்றுகின்றதென்றாயிற்று.

திருமதிள்களை ஸமுத்ரமாக ரூபணம் செய்வது நாற்புறமும் சூழ்ந்திருப்பதுபற்றி. இங்கு ப்ராகாரஸ்தாநத்தில் ஸமுத்ரத்தை வைத்து உரைத்தால் யதாக்ரமமாக அந்வயம் தட்டுகின்றதேயென்று சங்கிக்கவேண்டா; அங்ஙனே நிர்ப்பந்தமில்லையிறே. * ஏகாநேகஸ்வரூபாய ஸ்தூலஸூக்ஷ்மாத்மநே நம: * (1-2-3) என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும் "த்யாஜ்யோபாதேயங்கள் ஸுகது:க்கங்கள்" என்று ஆசார்ய ஹ்ருதயத்திலும் பிறவிடங்களிலும் ப்ரயோகங்கள் காண்க. ... ... ... ... (35)

जित बाह्यजिनादिमणिप्रतिमा अपि वैदिकयन्निव रङ्गपुरे ।
मणिमण्टपवप्रगणान् विदधे परकालकविः प्रणमेमहि तान् ॥ ३६ ॥

ஜிதபாஹ்யஜிநாதிமணிப்ரதிமா: அபி வைதிகயந்நிவ ரங்கபுரே,
மணிமண்டபவப்ரகணாந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந். 36

| | | | |
|---|---|---|---|
| பரகால கவி: | திருமங்கைமன்னன், | ரங்கபுரே | திருவரங்கமாநகரில் |
| ஜித பாஹ்ய ஜிநாதி மணி [illegible]: அபி | (தம்மால்) ஜயிக்கப் பட்ட வேத பாஹ்யர்களான ஜைநர் முதலானவர்களின் ஸ்வர்ண விக்ரஹங்களையும் | மணி மண்டப வப்ர கணாந் | சிறந்த திருமண்டபங்களையும் திரு மதிள்களையும் |
| இவ | வைதிகங்களாகச் செய்பவர் போன்று | விததே | நிர்மாணம் செய்தார்; |
| | | தாந் | அந்த மண்டப ப்ராகாரங்களை |
| | | ப்ரணமேமஹி | வணங்கக்கடவோம். |

* *— [illegible] திருவ[illegible] [illegible]திகர்களையும் வைதிகர்களாக்குவது [illegible] இவ்வார்த்தம் நன்கு விளங்கும். [illegible]வர் வைதிகங்களாக ஆக்கிவிட் [illegible] வைதிகத்வமாகும். (இங்கு [illegible] எழுந்தருளும[illegible]

प्राकार मध्याजिरमण्डपोक्त्या सद्वीपरत्नाकररत्नशैला ।
सर्वंसहा रङ्गविमानसेवाम् प्राप्तेव तन्मन्दिरमाविरस्ति ॥ ३५ ॥

ப்ராகாரமத்யாஜிரமண்டபோக்த்யா ஸத்வீபரத்நாகரரத்நசைலா,
ஸர்வம்ஸஹா ரங்கவிமாநஸேவாம் ப்ராப்தேவ தந்மந்திரமாவிரஸ்தி. 35

| | | | |
|---|---|---|---|
| (யத்) | யாதொரு ஸ்ரீரங்க மந்திரத்தில் | ஸர்வம்ஸஹா | பூமிப் பிராட்டியானவள் |
| ப்ராகார மத்ய அஜிர மண்டப உக்த்யா | திருமதிள்கள், இடைகழி, திரு மண்டபங்களென்னும் வியாஜத்தினால் | ரங்கவிமாந ஸேவாம் | ஸ்ரீரங்கவிமான ஸேவையை |
| ஸத்வீப ரத்நாகர ரத்நசைலா | ஸப்தத்வீபங்களோடும் ஸப்த ஸாகரங்களோடும் மஹா மேருவோடுங்கூடின | ப்ராப்தா இவ | அடைந்தனள் போலும்; |
| | | தத் மந்திரம் | அந்த ஸ்ரீரங்கமந்திரம் |
| | | ஆவிரஸ்தி | கண்ணெதிரே காட்சிதருகின்றது. |

* * *—ஸ்ரீரங்கமந்திரம் பூமிப்பிராட்டிபோன்றிருக்கிறதென்கிறார். ஸ்ரீரங்கவிமானத்தை ஸேவிப்பதற்காகப் பூமிப்பிராட்டி தன் பரிவாரங்களோடு இங்கு வந்துசேர்ந்திருக்கிறாள் போலும். கடல்களும் கடலிடைத்தீவுகளும் சிறந்த மலைகளும் பூமிப்பிராட்டியின் பரிவாரங்களாம். கோயிலைச்சுற்றி ஸப்தப்ராகாரங்கள் இருப்பது ஸப்தஸாகரங்களொக்கும்; ஒவ்வொரு திருமதிளுக்கும் இடையிலுள்ள அவகாசம் ஸப்தத்வீபங்கள்போலும். திருமண்டபங்கள் ரத்நபர்வதங்கள் போலும். ஆக இப்பரிவாரங்களுடனே பூமிப்பிராட்டி வந்துசேர்ந்து ஸ்ரீரங்க விமானஸேவையைப் பெற்றிருப்பதுபோல் மந்திரம் தோன்றுகின்றதென்றாயிற்று.

திருமதிள்களை ஸமுத்ரமாக ரூபணம் செய்வது நாற்புறமும் சூழ்ந்திருப்பதுபற்றி. இங்கு ப்ராகாரஸ்தாநத்தில் ஸமுத்ரத்தை வைத்து உரைத்தால் யதாக்ரமமாக அந்வயம் தட்டுகின்றதே யென்று சங்கிக்கவேண்டா; அங்ஙனே நிர்ப்பந்தமில்லையிறே. * ஏகாநேகஸ்வரூபாய ஸ்தூலஸூக்ஷ்மாத்மநே நம: * (1-2-3) என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும் "த்யாஜ்யோபாதேயங்கள் ஸுகதுக்கங்கள்" என்று ஆசார்ய ஹ்ருதயத்திலும் பிறவிடங்களிலும் ப்ரயோகங்கள் காண்க. ... ... ... ... (35)

जित बाह्यजिनादिमणिप्रतिमा अपि वैदिकयन्निव रङ्गपुरे ।
मणिमण्टपवप्रगणान् विदधे परकालकविः प्रणमेमहि तान् ॥ ३६ ॥

ஜிதபாஹ்யஜிநாதிமணிப்ரதிமா: அபி வைதிகயந்நிவ ரங்கபுரே.
மணிமண்டபவப்ரகணாந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந். 36

| | | | |
|---|---|---|---|
| பரகால கவி: | திருமங்கைமன்னன், | ரங்கபுரே | திருவரங்கமாநகரில் |
| ஜித பாஹ்ய ஜிந ஆதி மணி ப்ரதிமா: அபி | (தம்மால்) ஜயிக்கப் பட்ட வேத பாஹ்யர்களான ஜைநர் முதலானவர்களின் ஸ்வர்ண விக்ரஹங்களையும் | மணி மண்டப வப்ர கணாந் | சிறந்த திருமண்டபங்களையும் திரு மதிள்களையும் |
| இவ | வைதிகங்களாகச் செய்பவர் போன்று | விததே | நிர்மாணம் செய்தார்; |
| | | தாந் | அந்த மண்டப ப்ராகாரங்களை |
| | | ப்ரணமேமஹி | வணங்கக்கடவோம். |

* *— [illegible] திருவ[illegible] வைதிகர்களையும் வைதிகர்களாக்குவது [illegible] இவ்வர்த்தம் நன்கு விளங்கும். [illegible]வர் வைதிகங்களாக ஆக்கிவிட் [illegible]வைதிகத்வமாகும். (இங்கு [illegible] எழுந்தருளுமை[illegible]

# ஸௌசீல்ய குணாநுபவம்.

குணக்கடலாகிய எம்பெருமானது திருக்குணங்களில் எந்த குணத்தை யெடுத்துக் கொண்டாலும் அது ஒப்பற்றதாகவே காண்கிறது. வாத்ஸல்யமென்னுங்குணத்தை விமர்சிக்கும்போது 'இதற்கு ஈடான குணம் வேறு எதுவுமேயில்லை' என்று நினைக்க நேர்கின்றது. ஸௌலப்ய மென்னுங்குணத்தையெடுத்துப் பேசப் புகுந்தால் இந்த குணத்தோடொத்த வேறொரு குணமுண்டோ? என்றே எண்ணலாகிறது. காருண்ய குணத்தை யெடுத்து அநுபவிக்கப்புகுந்தாலோ அதற்கு மேற்பட்ட குணம் வேறொன்றில்லையென்றே நினைக்க நேர்கின்றது. இப்படி ஒவ்வொரு திருக்குணமும் ஒப்புயர்வற்று விளங்குமெனினும், அந்தந்த குணத்தை யநுபவிக்கும்போது அது நெஞ்சை கீர்ப்பண்டமாகவுருக்கியே நிற்கும்.

இப்போது ஸௌசீல்ய மென்னுங் குணத்தைச் சிறிது அநுபவிப்போம். சீல குணமென்றாலும் ஸௌசீல்யகுண மென்றாலும் இரண்டும் ஒன்றேயாகும். ஒத்தாரும் மிக்காருமில்லாதபடி பராத்பரனானவன் தன் மேன்மை பாராமல் தாழ்ந்தவர்களோடும் புரையறக் கலந்து பரிமாறுவதே சீலகுணமெனப்படும். இக்குணத்தை நாம் பகவானிடத்தில் அநுபவிக்கப் பல துறைகள் உண்டு. சில துறைகளிலேயிழிந்து இங்கு அநுபவிப்போம்.

* என்றேனும் கட்கண்ணால் காணாத அவ்வுரு * என்றும் * ந மாம்ஸசக்ஷுராபி வீக்ஷதே தம் * என்றும் உபயவேதாந்தங்களும் சொல்லுகிறபடியே மாம்ஸக்கண்ணுக்கு எட்டாத எம்பெருமான் ஆஸுரப்ரக்ருதிகளினிடையே வந்து அவர்களது கட்புலனுக்கும் இலக்காகித் திருவவதாரங்கள் செய்தருளினான்! என்கிறவிதுவே சீலகுணாநுபவத்திற்கு முதல் துறையாகும். கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் பத்தாவது ச்லோகம் * சீல: க ஏஷ தவ ஹந்த * என்று தொடங்குகிறார். அந்தோ! இது என்ன சீல குணம்! இதனை யெடுத்துப்பேச யாரால் முடியும்? என்கிறார். * அத்ராவதீர்ய நநு லோசந கோசரோபூ: * என்பதே அந்த ச்லோகத்தின் உயிரான வார்த்தை. கட்கிலியான பெருமான் யாவருடையவும் கட்புலனுக்கு இலக்காகித் திருவவதரித்தானென்பதை நினைக்கும்போதே அந்தோ! இது என்ன சீலகுணம்! குணமறிந்து உகக்கமாட்டாதே எதிரம்பு கோப்பதுஞ் செய்யாநின்ற அரக்காஸுரர் போன்ற மனிசரிடையே வந்து பிறக்கும் படியான இந்த சீலகுணத்தை என்னவென்று சொல்லுவது! என்று உருகுகிறார் கூரத்தாழ்வான்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் (5—10.) 'பிறந்தவாறும்' என்று ஒரு பதிகம் தொடங்குகிறார். கர்ம வச்யர்களாய் ஸம்ஸாரிகளான நாம் பத்துமாஸம் கர்ப்பவாஸம் செய்து பிறந்தால் அகர்மவச்யனான தான் * பன்னிரு திங்கள் வயிற்றில் கொண்டவப் பாங்கினால் * என்னும்படியாகப் பன்னிரண்டு மாஸம் கர்ப்பவாஸம் பண்ணிப் பிறப்பதே! என்று சொல்ல நினைத்து 'பிறந்தவாறும்!' என்ற வுடனே ஆறு மாஸம் மோஹித்துக் கிடந்தாராழ்வார் என்று ப்ரஸித்தமாயிருக்கும். அப்படி ஈரநெஞ்சினரை மோஹிக்கப் பண்ணவல்லதான பகவதவதாரத்தை நினைத்தவாறே 'இது என்ன சீலகுணம்!' என்று உருகவேண்டியது தவிர வேறில்லையன்றே. இனி, அவதாரம் என்ற சொல்லின் பொருளைச் சிறிது ஆராய்வோம்.

மேலிருந்து கீழேயிறங்குவது என்பதே அவதாரமென்னுஞ் சொல்லுக்கு உண்மையான பொருளாம். 'ப்ராஸாதாத் அவதாரணம்' 'ரதாத் அவதாரணம்' என்கிறோமல்லவா?

மித்தையிலிருந்து கீழேயிறங்குவது, தேரிலிருந்து கீழே யிறங்குவது என்று சொல்ல வேண்டும்போது அவதாரபதத்தைப் பிரயோகஞ் செய்கிறோம். ஆகவே மேலிருந்து கீழே யிறங்குவதே அவதார சப்தார்த்தம். பகவான் பரம பதமாகிய மேல் நிலத்திலிருந்து நிலவுலகமாகிய கீழ் நிலத்திற்கு வந்தானென்பது கொண்டு அவதாரமென்கிறோம் என்று நினைக்க வேண்டா. பின்னை எது கொண்டு அவதார மென்கிறோமென்னில், மேலான தனது நிலைமைகளை விட்டிட்டுக் கீழான நிலைமைகளை ஏற்றுக் கொண்டதற்கே அவதாரமெனப்படுகிறது. பகவானுக்கு மேலான நிலைமைகள் எவை யென்னில்; ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமை, எல்லா விடங்களிலுமுள்ளமை, எல்லாக் காலத்திலுமுள்ளமை, எல்லாப் பொருள்களாகவுமுள்ளமை என்னுமிவையே பகவானுடைய மேலான நிலைமைகளாம். இத்தகைய நிலைமைகளை அறவேவிட்டிட்டு இவற்றுக்கு எதிரிடையான தாழ்ந்த நிலைமைகளை ஏற்றுக் கொண்டல்லவோ பகவான் வந்து பிறந்தருளிற்று. ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதிருந்தவன் அரக்கசுரர் போல்வார் கண்ணுக்கும் புலப்பட்டான்; எல்லாவிடங்களிலுமுளனானவன் 'இப்போது அயோத்தியிலுளன், இப்போது சித்ரகூடத்திலுளன், இப்போது தண்டகாரணியத்திலுளன், இப்போது பஞ்சவடியிலுளன், இப்போது கிஷ்கிந்தையிலுளன், இப்போது கடற்கரையிலுளன்,—இப்போது மதுரையிலுளன், இப்போது திருவாய்ப்பாடியிலுளன், இப்போது த்வாரகையிலுளன்' என்னும்படியாகி ஓரிடத்திலிருக்கும்போது மற்றோரிடத்திலிலன் என்று நினைக்கும்படியாயினன். எக்காலத்திலுமுள்ளவன் ஒரு குறிப்பிட்ட காலத்திலேயே இராமனாகவும் கண்ணனாகவுமிருந்து மறைந்து மற்றைக் காலத்தில் இலன் என்று நினைக்கும்படி போயினன்.

அன்றியும், * நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய் சீரார்சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனாய்* தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய் *என்று ஆழ்வார்கள் அநுஸந்திக்கிறபடி எல்லாப் பொருள்களுமாக வுளனான எம்பெருமான், இராமன் கண்ணன் என்று குறிப்பிட்ட சில பெயர்களுக்குமாத்திரம் பொருளாகவிருந்தனன். ஆக இங்ஙனே உயர்ந்த நிலைமைகளை விட்டுத் தாழ்ந்த நிலைமைகளை ஏறிட்டுக் கொண்டு வந்து பிறந்தவாறு என்னே! என்று ஈடுபடும்படியாக்குகின்றது சீலகுணம். இங்ஙனே சீலகுணாநுபவத்திற்கு அவதாரமே ஒரு துறையாயிருக்கின்றது. இனி, அவதரித்துச் செய்த காரியங்களிலும் பலபல துறைகளுண்டு இந்த ஸௌசீல்யகுணாநுபவத்திற்கு. பகவான் சக்ரவர்த்தி திருமகனைத் திருவவதரித்தபோது குஹப்பெருமாளோடு கலந்து பரிமாறின படியைச் சிறந்ததுறையாக அநுபவிக்கிறார் திருமங்கையாழ்வார். அவர் தமது பெரிய திருமொழியில் (5—8—1.) * ஏழையேதலன் கீழ்மக னென்னாதிரங்கி * என்று தொடங்கியுள்ள பாசுரத்தில் இந்த சீலகுணத்தை மிகவற்புதமாக அநுபவித்துள்ளார். கங்கையில் ஓடம் விடுபவனும் ஆயிரம் ஓடங்கட்குத் தலைவனும் கங்கைக் கரையிலுள்ள சிருங்கிபேரபுரத்திற்கு அதிபதியுமாகிய ஒரு வேடர் தலைவன் குஹனென்பவன். இவன் பெருமாளோடு கலந்துபழகி வேறுபட்டவனல்லன் என்னும்படியாக ஐக்கியமடைந்ததனால் 'குஹப்பெருமாள்' என்றே ஸம்ப்ரதாய ப்ரஸித்தி பெற்றான். இவனிடத்திற்கு இராமபிரான் பிராட்டியோடும் இளையவனோடு மெழுந்தருளியபோது இவன் அப்பிரானுடைய வடிவழகிலீடுபட்டுப் பரிந்து திருமேனிக்காவல் செய்தவிதம் வெகு ஆச்சரியமானது. ஸ்ரீவசநபூஷணத்தில் (மங்களாசாஸநப்ரகரணத்தில்–247.) "இளையபெருமாளை ஸ்ரீ குஹப்பெருமாள் அதிசங்கைபண்ண இருவரையும் அதிசங்கை பண்ணி ஸ்ரீ குஹப்பெருமாள் பரிகரம் பெருமாளை நோக்கிற்றிறே." என்கிற சூர்ணிகை இன்சுவை மிக்கது. பெருமாள் சிருங்கிபேரபுரத்திலே யெழுந்தருளி, இளையபெருமாள் பாங்காக அமைத்த பர்ணசயனத்திலே பிராட்டி

யோடு பள்ளிகொண்டருளாநிற்க, இச்சேர்த்திக்கு என்ன தீங்கு விளையுமோவென்று அதிசங்கைகொண்ட இளையபெருமாள் முதுகிலிட்ட அம்பறுத் தூணியும் கையிற்பிடித்த வில்லுமாய் நடையாடும் மதிள்போலே உலாவிக்கொண்டு நிற்க, இதைக்கண்ட குஹப்பெருமாள் ஒரு தம்பி தாயைக் கொண்டு பெருமாளை நாட்டிலிருக்கவொட்டாமல் காட்டிலே துரத்தினன்; இத்தம்பி தனியிடத்திலே என் செய்யப் பார்க்கிருனே? என்று அவ்விளைய பெருமாளிடத்திலும் அதிசங்கை கொண்டு 'இவன் அப்படி ஏதேனு மொரு தீங்கு செய்யில் இவனையே முடித்துவிடுவது' என்று தானும் வில்லுமம்புமாய்க் கொண்டு நின்றதாக ஸ்ரீ ராமாயணத்திற் காண்கிறது. ஆனல் இது எந்த ஸமயத்தில் நடந்ததோ அந்த ஸமயத்தில் வான்மீகி முனிவரால் சொல்லப்படவில்லை; பிறகு பரதாழ்வான் சித்திரகூடஞ் செல்லப் புறப்பட்டு வருமளவில் அப்பரதனேடு குஹன்தானே இதைச் சொல்லுவதாக அமைக்கப் பட்டுள்ளது. [அயோத்யாகாண்டம். 87-வது ஸர்க்கம் 23, 24 சுலோகங்கள் காண்க.] தொட்டிற்பருவமே பிடித்து இராமபிரான் மீது அளவு கடந்த அன்பு கொண்டிருக்கின்ற இளைய பெருமாள் மேலும் அதிசங்கை தோன்றிப் பெருமாளிடத்தில் பரிவு காட்டின இக்குகனுடைய அன்பை என்னவென்று சொல்லுவது. இவனுக்கு இவ்வளவான அன்பு இருந்தது பற்றியே பெருமாள் முதன் முதலாக இவனிடத்தில் தமது சீலகுணத்தைக் காட்டியருளினர். குகனுடைய தாழ்வை எடுத்துக்காட்டுகின்ற திருமங்கையாழ்வார் "ஏழையேதலன் கீழ்மக னென்னுதிரங்கி" என்கிருர். பெருமாள் குஹனை அவக்ஷியஞ் செய்கைக்கு இவ்விழி குணங்களில் ஒரோன்றே அமைவதாயிருக்க, அவை பலவுமுள வென்று கண்டும் அருட்கடலான பெருமான் குஹனிடம் உபேக்ஷை கொள்ளாமலிருந்ததோடு அளவு கடந்த அன்பையும் அவன் மீது காட்டியருளினன். க்ஷத்ரிய ஜாதியில் ஸூர்ய குலத்தில் திருவவதரித்தவனும் சக்ரவர்த்தியின் திருக்குமாரனும் ஸகலைச்வர்ய ஸம்பன்னனும் மஹா புத்திமானும் பகைவரிடத்தும் அன்பு கொள்பவனுமான இராமபிரான் குஹனை நோக்குங்கால் இவன் இழிவான வேடச்சாதியனென்றும் அதனல் பகுத்தறிவில்லாத அவிவேகியென்றும் அச்சாதிக்கு இயல்பான கொடுமையினல் எல்லாவுயிர்களோடும் பகைமை கொள்பவனென்றும் இப்படிப்பட்ட தன்மைகளைக் கண்டு இகழ்ச்சி கொள்ள வேண்டியிருந்தும் தனது பெருமைக்குணங்களையும் பாராமல் அவனுடன் கலந்து பரிமாறின விதம் எத்தகைத்தென்னில், * சீரணிந்த தோழமை கொண்டது போரவுடையாளம் * என்று திருவடிவாக்கில் வரும்படியாகவன்றோ கலந்தது. பெருமாள் குகனேடு கொண்ட நட்பு சீரணிந்த தோழமையாம்.

இங்கே ஒரு விசாரம் ப்ராப்தமாகிறது; குகனுடைய அளவுகடந்த அன்பைக் கண்டு அவனேடு தோழமை கொண்டாரா? அல்லது பெருமாள் சீரணிந்த தோழமை கொண்டதற்காகக் குகன் அன்பு பாராட்டினனே? என்று விசாரம் செய்யவேண்டியதாகிறது. எம்பெருமான் திருவுள்ளத்திற்கே தெரியக் கூடியதான இவ்விஷயத்தில் நாம் என்ன விடையிறுப்பது. பெருமாள் கங்கைக் கரை சேர்ந்தவுடனே அதனைக் கேள்விப் பட்ட குகன் தன்னினத்தாரோடு பெருமாளிடம் வந்து சேர்ந்தா னென்பதைக் கூறுகின்ற வான்மீகி முனிவர் * தத்ர ராஜா குஹோ நாம ராமஸ்ய ஆத்மஸமஸ் ஸகா * என்கிருர். குஹனைப்பற்றி முதன் முதலாக ப்ரஸ்தாவஞ் செய்யுமிவ்விடத்தில் "ராமஸ்ய ஆத்மஸமஸ் ஸகா" [இராமனுக்கு உயிரோடொத்த தோழன் குகன்] என்று கூறியிருப்பது மிகவும் வியக்கத்தக்கது. இராமனுடைய உயிர்த்தோழனுன குகன் இராமனது வரவைக் கேள்விப் பட்டு வந்து சேர்ந்தானென்று கூறியிருப்பதனல் இவ்விருவர்க்கும் தோழமை முன்னே பிடித்தேயுள்ளதுபோல் தோன்றுகின்றது. குகன் வரும் போதே இராமனைத் தழுவிக்

கொண்டதாகவும் சொல்லப்படுகிறது. * தம் ஆர்த்தஸ் ஸம்பரிஷ்வஜ்ய குஹோ ராகவம் அப்ரவீத் * என்றன்றோ வான்மீகி முனிவர் கூறியுள்ளது.

ஆனால் ஆழ்வாரருளிச் செயலினாலும் கம்பருடைய வாக்கினாலும் இந்தத் தோழமை அப்போதுதான் தோன்றியதென்று நன்கு தெரிகின்றது. "குகனோடுங் கங்கைதன்னில் சீரணிந்த தோழமைகொண்டதுமோரடையாளம்" என்பது பெரியாழ்வார் திருவாக்கு. கம்பராமாயணம் விபீடணனடைக்கலப் படலத்தில் (146) "குகனொடுமைவரானோம் முன்பு பின் குன்று சூழ்வான் மகனொடு மறுவரானோம் எம்முழையன்பின்வந்த அகனமர்காதலைய! நின்னொடுமெழுவரானோம், புகலருங்கானந்தந்து புதல்வராற் பொலிந்தானுந்தை" என்ற செய்யுள் மிக இன்சுவையுடைத்து. இதன் கருத்தாவது—அயோத்திமாநகரில் நான்குபேர் நாங்கள் தசரதனுக்குப் புதல்வர்களாய்ப் பிறந்தோம்; நால்வர் பிறந்தும் த்ருப்திபெறாத தயாதன் இன்னமும் புத்ரர்களை வேண்டியே எங்களைக் காட்டுக்கனுப்பினன் 'நீங்களிருவரும் காடு சென்று இன்னமுஞ் சில தம்பிமார்களைச் சம்பாதித்துக்கொண்டு வாருங்கள்' என்றே எங்களைக் கானகம் போக விட்டனன். அப்படியே நாங்கள் பல தம்பிகளைச் சம்பாதித்துக் கொண்டோம். கங்கைக் கரையிலே குகனை ஒரு தம்பியாகப் பெற்றோம்; பம்பைக் கரையிலே சுக்ரீவனை ஒரு தம்பியாகப் பெற்றோம்; விபீடணா! இப்போது கடற்கரையிலே உன்னையொரு தம்பியாகப்பெற்றோம்; ஆக நம் தந்தை எழு புத்திரர்களைப் பெற்றனாயினன்—என்பதாம். இங்ஙனம் கூறுகின்ற இராமனது கருத்து என்ன? குகனிடத்தும் சுக்ரீவனிடத்தும் விபீடணனிடத்தும் கூடப்பிறந்த தம்பியினிடத்திற்போலத் தான் அன்பு பாராட்டுபவன் என்பதை வெளியிட்டபடியல்லவோ இது. ஆக விப்படி குகன் சுக்ரீவன் விபீடணன் போல்வாரிடத்து ஒரு நீராகக் கலந்து பழகும் சீலகுணம் அநுபவரஸிகர்களுக்குப் பரமபோக்யமாயிருக்குமன்றோ.



ஆனால் சாஸ்த்ரங்களில் * ஹீநப்ரேஷ்யம் ஹீநஸக்யம் ஹீநகேஹ நிஷேவணம் * என்று, தவறான காரியங்களைச் சொல்லுமிடத்து—நீசர்களுக்குப் பணிவிடைசெய்வது, அவர்களோடு தோழமை கொள்ளுவது, நீசர்களின் மனைகளிலே சென்றிருப்பது ஆகியவிவை பாபங்களாகச் சொல்லப்படாநிற்க இவற்றைப் பெருமாள் செய்யலாமோ? செய்தவிது ஒரேற்றமாகுமோ? என்று சங்கிப்பர் சிலர். கேண்மின்; நம்மைப்போன்ற அற்பமனிசர் இவை செய்தால் நமக்கு இவை தவறேயாகும். உயர்ந்தாரில் ஒப்பற்ற பெருமாள் இவை செய்தால் அவருடையபெருமை இன்னமும் பொலிந்து தோன்றுமேயல்லது ஒரு குறையும் தோன்றாது. "ஹீநப்ரேஷ்யம் ஹீநஸக்யம் ஹீநகேஹநிஷேவணம்" என்று ஹேயமாகச் சொல்லப்பட்ட மூன்று காரியங்களையும் பகவான் அவதாரங்களிற் செய்து ஏற்றமே பெற்றிருக்கக் காண்கிறோம். பாண்டவதூதனும் பார்த்தஸாரதியாயுமிருந்த விருப்பிலே ஹீநப்ரேஷ்யம் செய்ததைக் கண்டோம். விதுரருடைய திருமாளிகையிலே சென்று அமுதுசெய்த நிலைமையிலே ஹீந கேஹநிஷேவணம் கண்டோம். ஹீநஸக்யம் குகன் முதலானோரிடத்துக் கண்டோம். இவற்றால் எம்பெருமானுடைய பெருமைக்கு ஒரு குறையில்லை என்பது மாத்திரமல்ல; பெருமை முன்னிலும் ஒளி விஞ்சுகின்றது. பாண்டவதூதன், பார்த்தஸாரதி என்கிற திருநாமங்களினால் எம்பெருமானுக்கு விளையும் பெருமை நாராயணாதி நாமங்களினாலும் விளைகின்றதில்லையே. * அவனே பின்னோர் தூது ஆதிமன்னர்க்காகிப் பெருநிலத்தார் இன்னார் தூதனென நின்றான் எவ்வுள் கிடந்தானே * என்ற பெரியதிருமொழிப் பாசுரத்தின் விசேஷார்த்தமுணர்க.



---

# ஆழ்வார்கள் கண்ட திருக்கச்சி

போட்டோ — வை. மு. ஸ்ரீ., M. A. B. L.

## 1. அத்திகிரி—தேவப்பெருமாள்

பூதத்தாழ்வார் — என்னெஞ்சமேயான்
அத்தியூரான் புள்ளையூர்வான்.
நம்மாழ்வார் — அயர்வறுமமரர்களதிபதி
துயரறுசுடரடி.
திருமங்கையாழ்வார் — வரந்தரும்மாமணி
வண்ணன்.



## 2. திருவெஃகா—யதோக்தகாரி

பொய்கையார் — வேங்கடமும் விண்ணகரும்
வெஃகாவும்
பேயாழ்வார் — பொருப்பிடையே.
திருமழிசையாழ்வார் — நின்றதெந்தை.
நம்மாழ்வார் — நானிலம்வாய்க்கொண்டு
திருமங்கையாழ்வார் — கூந்தலார்மகிழ்

ஜகன்மோகினி அன்பளிப்பு



3. அட்டபுயகரம்

பேயாழ்வார் — தொட்டபடை

திருமங்கையாழ்வார் — திரிபுரமூன்று (பதிகம்)



5. பாடகம்—பாண்டவதூதர்

பூதத்தாழ்வார் — உற்றுவணங்கித்தொழுமின்

திருமழிசையாழ்வார் — நின்றதெந்தை

திருமங்கையாழ்வார் — கல்லார்மதிள்சூழ்கச்சி



4. திருத்தண்கா—விளக்கொளி

திருமங்கையாழ்வார் — பொன்னைமாமணியை.

6. உலகளந்த
பெருமாள்

ஊரகம்
காரகம்
நீரகம்
கார்வானம்



திருமங்கையாழ்வார் — நீரகத்தாய்



7. பரமேச்சுர விண்ணகரம்
(வைகுந்தப்பெருமாள்)

திருமங்கையாழ்வார் — சொல்லுவன்
(பதிகம்)

குறிப்பு:—
வேளுக்கை யாளரி
பேயாழ்வார் — சிறந்தவென்
திருமங்கையாழ்வார் — பெரிய திருமடல்
இந்த ஸ்தலம் பல வருடங்களாகப் பூட்டப்பட்டு ஆராதனையின்றி யிருக்கிறது: போடோ எடுக்கவில்லை.



8. பச்சைவண்ணர் (ஆழ்வார் பாடல் பெறாத ஸ்தலம்)

ஜகன்மோஹினி அன்பளிப்பு



9. பவளவண்ணம்

திருமங்கையாழ்வார் — நீரகத்தாய்

10. நிலாத்திங்கள் துண்டம்

திருமங்கையாழ்வார் — நீரகத்தாய்



11. கள்வர்

திருமங்கையாழ்வார் —
நீரகத்தாய்.



குறிப்பு:— ஷை 10, 11 இரண்டு ஸந்நிதிகளும் முறையே ஏகாம்பரேச்வரர் கோவிலிலும், காமாக்ஷியம்மன் கோவிலிலும் உள்ளன.

* * *—மற்ற எம்பெருமான்களைப்போலே கீழ்நிலத்தில் எழுந்தருளியிராமே மேட்டு நிலத்தில் எழுந்தருளியிருக்கு மிருப்பை நோக்கினால்* 'ஆவாரார் துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல் பிறவிக்கடலுள் நின்று துளங்கும் ஸம்ஸாரிகளுக்கு நானே கைப்பிடிகொடுத்து உய்விக்கவல்லேன்' என்று தெரிவிப்பவர் போன்றிருக்கின்றனராம் மேட்டழகியசிங்கர்; திருமேனி ஒருபடியும் திருமுகம் ஒருபடியுமாய் [நரங்கலந்த சிங்கமாய்]ப் பொலிகின்ற ஒரு பரஞ்சோதி இதோ கண்முன்னே தோன்றுகின்றது என்றதாயிற்று.

'வாஸிதம்' 'ஸௌரபிதம்' என்ற பதங்களினால் "ஸர்வகந்தஃ" என்கிற உபநிஷத்து ஸ்மரிப்பிக்கப்படும்: பரிமள ப்ரசுரமாயிறே வடிவிருப்பது. ... .... .... (47)

संशोध्य पावनमनोहरदृष्टिपातैर्देवाय मामपि निवेदयतां गुरूणाम् ।
सव्योत्तरे भगवतोऽस्य कटाक्षवीक्षापङ्क्तिं प्रपद्य परितः परितो भवेयम् ॥४८॥

ஸம்சோத்ய பாவநமநோஹரத்ருஷ்டிபாதைஃ தேவாய மாமபி நிவேதயதாம் குரூணாம்,
ஸவ்யோத்தரே பகவதோஸ்ய கடாக்ஷவீக்ஷாபங்க்திம் ப்ரபத்ய பரிதஃ பரிதோ பவேயம். 48

| | |
|---|---|
| மாம் அபி | நீசனான அடியேனையும் |
| பாவந மநோஹர த்ருஷ்டி பாதைஃ | பரிசுத்தமாய் அழகியவான கடாக்ஷங்களாலே |
| ஸம்சோத்ய | பரிசுத்தனாக்கி |
| தேவாய | எம்பெருமானுக்கு |
| நிவேதயதாம் | உரியேனாம்படி செய்தருள்கின்றவர்களும் |

| | |
|---|---|
| அஸ்ய பகவதஃ ஸவ்ய உத்தரே (ஸதாம்) | இவ் வெம்பெருமானுடைய இடதான வடபுறத்திலே எழுந்தருளி யிருப்பவர்களுமான |
| குரூணாம் | ஆசார்யர்களுடைய |
| கடாக்ஷ வீக்ஷா பங்க்திம் ப்ரபத்ய | திருக்கண்ணோக்கங்களைத் தஞ்சமாகப் பற்றி |
| பரிதஃ பரிதஃ பவேயம் | (அவர்களைப்) ப்ரதக்ஷிணம் செய்யக் கடவேன். |

* * *—உடையவர் நித்யக்ரந்தத்தில் பீடார்ச்சனைகள் அருளிச்செய்த பின்பு "யோகபீடஸ்ய பச்சிமோத்தரதிக்பாகே ஓம் அஸ்மத்குருப்யோ நமஃ இதி குரூந் கந்தபுஷ்பதூபதீபை: அப்யர்ச்ச்ய ப்ரணம்ய அநுஜ்ஞாப்ய பகவத்யாகமாரபேத" என்றருளிச் செய்திருப்பதை யநுஸரித்து இந்த ச்லோகமருளிச்செய்கிறார். "வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்கிறபடியே ஆசார்யர்களை முன்னிட்டே எம்பெருமானைப் பணிதல் முறைமையாதலால் இது ஒக்கும்.

Released by Maran's Dog ,Toronto, Canada

பகவத்விஷயத்துக்கு ஆளாக வொண்ணாதபடி நீசனாய் நிறைவொன்றுமிலனான அடியேனையும் தமது பரமபாவநங்களான திருக்கண்ணோக்கங்களாலே அழுக்கறுத்துப் புனிதனாக்கி பகவத்விஷயத்துக்கு ஆளாக்குகின்றவர்களாய் இப்பெருமானுடைய இடதான வடபுறத்திலே யெழுந்தருளி யிருப்பவர்களான அஸ்மதாசார்யர்களினுடைய கடாக்ஷத்திற்கு அடியேன் இலக்காகி அவர்களை வலஞ்செய்து வாழக்கடவேனென்கை. ... ... (48)

Released by Maran's Dog ,Toronto, Canada

श्रीरङ्गराजकरनम्रितशाखिकाभ्यो लक्ष्म्या स्वहस्तकलितश्रवणावतंसम् ।
पुन्नागतल्लजमजस्रसहस्रगीतिसेकोत्थदिव्यनिजसौरभमामनामः ॥४९॥

ஸ்ரீரங்கராஜகரநம்ரிதசாகிகாப்யஃ
லக்ஷ்ம்யா ஸ்வஹஸ்தகலிதச்ரவணாவதம்ஸம்,
புந்நாகதல்லஜமஜஸ்ரஸஹஸ்ரகீதி
ஸேகோத்ததிவ்யநிஜஸௌரபமாமநாமஃ. 49

* * *—மற்ற எம்பெருமான்களைப்போலே கீழ்நிலத்தில் எழுந்தருளியிராமே மேட்டு நிலத்தில் எழுந்தருளியிருக்கு மிருப்பை நோக்கினல்* 'ஆவாரார் துணையென்று அலைநீர்க்கட லுளழுந்தும் நாவாய்போல் பிறவிக்கடலுள் நின்று துளங்கும் ஸம்ஸாரிகளுக்கு நானே கைப் பிடிகொடுத்து உய்விக்கவல்லேன்' என்று தெரிவிப்பவர் போல் நிருக்கின்றனராம் மேட்டழ கியசிங்கர்; திருமேனி ஒருபடியும் திருமுகம் ஒருபடியுமாய் [நாங்கலந்த சிங்கமாய்]ப் பொலி கின்ற ஒரு பரஞ்சோதி இதோ கண்முன்னே தோன்றுகின்றது என்றுாாயிற்று.

'வாஸிதம்' 'ஸுரபிதம்' என்ற பதங்களினுல் "ஸர்வகந்தஃ" என்கிற உபநிஷத்து ஸ்மரிப்பிக்கப்படும்: பரிமள ப்ரசுரமாயிறே வடிவிருப்பது. ... .... .... (47)

संशोध्य पावनमनोहरदृष्टिपातैर्देवाय मामपि निवेदयतां गुरूणाम् ।
सव्योत्तरे भगवतोऽस्य कटाक्षवीक्षापङ्क्तिं प्रपद्य परितः परितो भवेयम् ॥४८॥

ஸம்சோத்ய பாவநமநோஹரத்ருஷ்டிபாதை: தேவாய மாமபி நிவேதயதாம் குரூணாம்,
ஸவ்யோத்தரே பகவதோஸ்ய கடாக்ஷவீக்ஷாபங்க்திம் ப்ரபத்ய பரித: பரிதோ பவேயம். 48

| | | | |
|---|---|---|---|
| மாம் அபி | நீசனுன அடியேனையும் | அஸ்ய பகவத: ஸவ்ய உத்தரே (ஸதாம்) | இவ் வெம்பெருமானுடைய இடதான வடபுறத்திலே எழுந்தருளி யிருப்பவர்களு மான |
| பாவந மநோஹர த்ருஷ்டி பாதை: | பரிசுத்தமாய் அழகியவான கடாக்ஷங்களாலே | குரூணும் | ஆசார்யர்களுடைய |
| ஸம்சோத்ய | பரிசுத்தனுக்கி | கடாக்ஷ வீக்ஷா பங்க்திம் ப்ர பத்ய | திருக்கண்ணேக்கங்களைத் தஞ் சமாகப் பற்றி |
| தேவாய | எம்பெருமானுக்கு | பரித: பரித: பவேயம் | (அவர்களைப்) பிரதக்ஷிணம் செய்யக் கடவேன். |
| நிவேதயதாம் | உரியேனும்படி செய்தருளு கின்றவர்களும் | | |

* * *—உடையவர் நித்யக்ரந்தத்தில் பீடார்ச்சனைகள் அருளிச்செய்த பின்பு "யோக பீடஸ்ய பச்சிமோத்தரதிக்பாகே ஓம் அஸ்மத்குருப்யோ நம: இதி குரூந் கந்தபுஷ்பதூபதீபை: அப்யர்ச்ய ப்ரணம்ய அநுஜ்ஞாப்ய பகவத்யாகமாரபேத" என்றருளிச் செய்திருப்பதை யது ஸரித்து இந்த ச்லோகமருளிச்செய்கிருர். "வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணேர் பெரு மான் திருப்பாதம் பணிந்து" என்கிறபடியே ஆசார்யர்களை முன்னிட்டே எம்பெருமானைப் பணிதல் முறைமையாதலால் இது ஒக்கும்.

பகவத்விஷயத்துக்கு ஆளாக வொண்ணுதபடி நீசனுய் நிறைவொன்று மிலனுன அடியேனையும் தமது பரமபாவநங்களான திருக்கண்ணேக்கங்களாலே அழுக்கறுத்துப் புனி தனுக்கி பகவத்விஷயத்துக்கு ஆளாக்குகின்றவர்களாய் இப்பெருமானுடைய இடதான வட புறத்திலே யெழுந்தருளி யிருப்பவர்களான அஸ்மதாசார்யர்களினுடைய கடாக்ஷத்திற்கு அடியேன் இலக்காகி அவர்களை வலஞ்செய்து வாழக்கடவேனென்கை. ... ... (48)

श्रीरङ्गराजकरनम्रितशाखिकाभ्यो लक्ष्म्या स्वहस्तकलितश्रवणावतंसम् ।
पुन्नागतल्लजमजस्रसहस्रगीतिसेकोत्थदिव्यनिजसौरभमामनामः ॥४९॥

ஸ்ரீரங்கராஜகரநம்ரிதசாகிகாப்ய:
லக்ஷ்ம்யா ஸ்வஹஸ்தகலிதச்ரவணவதம்ஸம்,
புந்நாகதல்லஜமஜஸ்ரஸஹஸ்ரகீதி
ஸேகோத்ததிவ்யநிஜஸௌரபமாமநாம:. 49

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கராஜ- | ஸ்ரீரங்கநாதனுடைய | அஜஸ்ர— | எப்போது முண்டான |
| கர— | திருக்கைகளினால் | ஸஹஸ்ரகீதி ஸேக— | திருவாய்மொழிப் பெருக்கினால் |
| நம்ரித— | வணக்கப்பட்ட | உத்த— | உண்டான |
| சாகிகாப்ய: | கிளைகளில்நின்றும் | திவ்ய நிஜ ஸௌரபம் | விலக்ஷணமான பரிமளத்தையுடையதுமான |
| லக்ஷ்ம்யா | ஸ்ரீரங்கநாயகியினால் | புந்நாக தல்லஜம் | சிறந்த திருப்புன்னை மரத்தை |
| ஸ்வஹஸ்த கலித ச்ரவண அவதம்ஸம் | தனது திருக்கையினால் பறித்துக் கொள்ளப்பட்ட கர்ண பூஷண புஷ்பத்தையுடையதும் | ஆமநாம: | துதிக்கிறோம். |

* * *—சந்த்ரபுஷ்கரிணியின் கரையிலுள்ள திருப்புன்னைமரத்தைத் துதிக்கின்றார். நம் பூருவாசாரியர்கள் இத்திருப்புன்னையின்கீழ் எழுந்தருளியிருந்து வேதாந்த ரஹஸ்யார்த்தங்களைப் பரஸ்பரம் விமர்சிப்பர்கள் என்றொரு ப்ரஸித்தியுண்டு; அன்றியும் திருவாய்மொழி மூலம் ஓதுவித்தலும் இத்திருப்புன்னையினடியில் நெடுநாள் நிகழ்ந்ததாகவும் ப்ரஸித்தியுண்டு. ஆகவிப்படிப்பட்ட சிறப்பு வாய்ந்த இத்திருப்புன்னையை விசேஷித்துத் துதித்தல் ஆவச்யகமேயாம்.

ஸ்ரீரங்கநாதனும் ஸ்ரீரங்கநாச்சியாரும் விலாஸ விஹாரங்கள் செய்தருளும்போது இத்திருப்புன்னையின் மலர்களைப்பறித்துக் கர்ணபூஷணமாக இட்டுகொள்ள விரும்புவள் ஸ்ரீரங்கநாயகி; அப்போது மலர்கொய்வதற்குப் பாங்காக ஸ்ரீரங்கநாதன் தனது திருக்கையினால் இம்மரத்தின் கிளைகளைத் தாழ்த்துவனும்; அவற்றினின்றும் பிராட்டி பூக்கொய்துகொள்ளுவளாம்: அப்படிப்பட்ட பெருமைவாய்ந்ததாகும் இந்த வ்ருக்ஷம்.

[அஜஸ்ரஸஹஸ்ரகீதி ஸேகோத்த திவ்ய நிஜ ஸௌரபம்.] அடியில் இருந்துகொண்டு திருவாய்மொழியின் மூலத்தை உருச்சொல்லுவாரும் அர்த்தங்களை ஆராய்ச்சிசெய்வாரும் ஓய்தலொழிவின்றிப் பலருண்டாகையாலே இம்முகத்தால் அருளிச்செயலின் நறுமணமும் இம்மரத்திலே கமழ்கின்றதென்கிறார்.

புந்நாகதல்லஜம்=‘தல்லஜ’ சப்தம் ச்ரேஷ்டவாசகம். ‘ஆநமாமஃ’ என்றும் பாடமுண்டு; வணங்குகிறோமென்கை. ... ... ... (49)

श्रीरङ्गचद्रमसमिन्दिरया विहर्तुं विन्यस्य विश्वचिदचिन्नयनाधिकारम् ।
यो निर्वहत्यनिशमङ्गुलिमुद्रयैव सेनान्यमन्यविमुखास्तमशिश्रियाम ॥५०॥

ஸ்ரீரங்கசந்த்ரமஸமிந்திரயா விஹர்த்தும் விந்யஸ்ய விச்வசிதசிந்நயநாதிகாரம்,
யோ நிர்வஹத்யநிசமங்குளிமுத்ரயைவ ஸேநாந்யமந்யவிமுகாஸ் தமசிச்ரியாம. 50

| | | | |
|---|---|---|---|
| ய: | யாவனொரு ஸேனை முதலியார் | அநிசம் | எப்போதும் |
| ஸ்ரீரங்க சந்த்ரமஸம் | ஸ்ரீரங்கநாதனை | அங்குளி முத்ரயா ஏவ | (தனது) திருவிரல் முத்திரை கொண்டே |
| இந்திரயா | பிராட்டியோடு கூட | நிர்வஹதி | நிர்வஹிக்கிறாரோ, |
| விஹர்த்தும் | திருவிளையாடல் செய்யும்படியாக | தம் ஸேநாந்யம் | அந்த ஸேனை முதலியாரை |
| விந்யஸ்ய | (சேஷசயனத்திலே) அமர்த்தி, | அந்ய விமுகா: (ஸந்த:) | வேறு புகலிடம் நோக்குதலற்றவர்களாய்க் கொண்டு |
| விச்வ சித் அசித் நயந அதிகாரம் | ஸமஸ்த சேதநா சேதநங்களையும் நியமிக்கு மதிகாரத்தை | அசிச்ரியாம | அடிபணிந்தோம். |

* * *—வழியடைவே ஸேனைமுதலியாரைத் தொழுகிறாரிதில். ஸகலப்ரபஞ்சங்களையும் நெறிபட நிர்வஹிக்கும் கடமை எம்பெருமானுடையது; அதனை விஷ்வக்ஸேநன் தான் ஏன்று கொண்டு ‘தேவரீர்க்குக் கவலைவேண்டா; பெரியபிராட்டியாரோடே இனி

தாகக் கண்வளர்ந்தருளீர் ; அடியேன் காரியங்கள் பார்த்துக்கொள்ளுகிறேன் ' என்று விண்ணப்பம் செய்யவே எம்பெருமான் ஸகலபாரங்களையும் அப்படியே ஸேனாநாதன் தலையில் போறுப்பாக்கி விசாரமற்றுப் பிராட்டியோடே ஸரஸ விஹாரங்கள் செய்து களிக்கிறான். ஆக விப்படி ஜகந்நிர்வஹணபாரத்தை யேற்றுக்கொண்டு தமது திருவிரல் முத்திரையினாலேயே உலகங்களை யடக்கியாள்பவரான ஸேனைமுதலியாரை வணங்கினே னென்றாராயிற்று.

இந்த ச்லோகத்திற் சொன்ன அங்குளிமுத்ரை விஷ்வக்ஸேநருடைய திருக்கோலங்களில் காணத்தக்கது.

ஸுதர்சநசதகத்தின் முடிவில் * யஸ்மிந் விந்யஸ்ய பாரம் விஜயிநி ஜகதாம் ஜங்கமஸ்தாவராணாம் லக்ஷ்மீ நாராயணாக்யம் மிதுநமநுபவதி அத்யுதாராந் விஹாராந்* என்று ஜகந்நிர்வஹண பாரங்களை யெல்லாம் திருவாழியாழ்வான் பக்கலில் வைத்திட்டதாகச் சொல்லுகிறதே யென்னில் ; அதுவுமுண்டு ; எம்பெருமானுக்கு அந்தரங்கரான பல அடியார்களும் கூறு கொண்டு நோக்க வேண்டும்படியிறே விபூதிவிஸ்தார மிருப்பது.

ஸேநாந்யம் = ' ஸேநாநீ: ' என்பது முதல்வேற்றுமை. ... ... (50)

सैन्यधुरीणप्राणसहायां सूत्रवतीमाशिश्रियमम्बाम् ।
श्रीपदलाक्षालाञ्छितसेवाप्रोतलसद्दोर्वल्लिविलासाम् ॥५१॥

ஸைந்யதுரீணப்ராண ஸஹாயாம் ஸூத்ரவதீமாசிச்ரியமம்பாம்,
ஸ்ரீபத லாக்ஷாலாஞ்சிதஸேவா ப்ரோதலஸத்தோர் வல்லிவிலாஸாம். 51

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ- | பெரியபிராட்டியாருடைய | தோர் வல்லி விலாஸாம் | கொடிபோன்ற கையின் அழகை யுடையவளும் |
| பத- | திருவடிகளில் சாத்தின | ஸைந்யதுரீண ப்ராண ஸஹாயாம் | ஸேனை முதலியாரின் ப்ரிய பத்நியுமான |
| லாக்ஷா- | செம்பஞ்சுச்சாறு தன்னால் | ஸூத்ரவதீம் | ஸூத்ரவதியென்கிற |
| லாஞ்சித | அடையாளமிடப் பெற்ற | அம்பாம் | தாயை |
| ஸேவா ப்ரோத- | கைங்கர்யார்த்தமான ப்ரோத வஸ்த்ரத்தினால் | ஆசிச்ரியம் | ஆச்ரயித்தேன். |
| லஸத்- | விளங்காநின்ற | | |

***—கீழ் ச்லோகத்தில் தொழப்பட்ட ஸேனைமுதலியாரின் திவ்யமஹிஷியான ஸூத்ரவதியைத் தொழுகிறாரிதில். ஸேனைமுதலியார் எம்பெருமானுக்கு நித்யஸேவை பண்ணுவதுபோல் அவர்மனைவியான இவள் பெரியபிராட்டியாருக்கு நிரந்தரம் திருவடி ஸேவை பண்ணுகையாலே அப்பிராட்டியின் திருவடிகளிற் சாத்தின செம்பஞ்சிக் குழம்புக்குத் திருவொற்றுக்காப்பு ஸமர்ப்பிக்கும் கைங்கர்யம் இவளுடையதென்று நன்கு விளங்கும்படி அச்செம்பஞ்சிக் குழம்பின் இலச்சினை விளங்கப்பெற்ற திருவொற்றுவாடையைக் கையிற் கொண்டிருக்கின்ற ஸூத்ரவதியைத் தொழுதேனென்கை.

ஸஹாயசப்தம் நித்ய புல்லிங்கமென்று பலர் கொள்வர் ; அப்போது, ஸைந்யதுரீணரை ப்ராணஸஹாயராக வுடையவள் என்று பஹுவ்ரீஹியாகக்கடவது. திருவொற்றுவாடைக்கு ப்ரோதவஸ்த்ரமென்று பெயர். 'ப்லோத' என்றும் வழங்குவர். .... (51)

विदधतु सुखं विष्वक्सेनस्य ते प्रथमे भटाः करिमुखजयत्सेनौ कालाह्वसिंहमुखौ च नः ।
जगति भजतां तत्तत्प्रत्यूहतूलदवानलाः दिशिदिशि दिवारात्रं श्रीरङ्गपालनकर्मठाः ॥५२॥

விததது ஸுகம் விஷ்வக்ஸேநஸ்ய தே ப்ரதமே படா:
கரிமுகஜயத்ஸேநௌ காலாஹ்வ ஸிம்ஹமுகௌ ச ந:,
ஜகதி பஜதாம் தத்தத்ப்ரத்யூஹதூலதவாநலா:
திசிதிசி திவாராத்ரம் ஸ்ரீரங்கபாலநகர்மடா:. 52

| | | | |
|---|---|---|---|
| ஜகதி | இவ்வுலகத்தில், | தே | ப்ரஸித்தர்களான |
| பஜதாம் | (தம்மை) அடைகின்றவர்களுடைய | ப்ரதமே படா: | முக்கிய ஸேவகர்களுமான |
| தத் தத் ப்ரத்யூஹ்தூல தவாநலா: | பலவகையான இடையூறுகளாகிற பஞ்சுகளுக்குக் காட்டுத் தீ போன்றவர்களும் | கரிமுக ஜயத்ஸேநௌ காலாஹ்வ ஸிம்ஹமுகௌ ச | கஜாநநன், ஜயத்ஸேநன், ஹரி வக்த்ரன், காலப்ரக்ருதி என்கிற நால்வரும் |
| திவாராத்ரம் | இரவும் பகலும் | ந: | நமக்கு |
| திசிதிசி | திசைகள் தோறும் | ஸுகம் | ஸௌக்கியத்தை |
| ஸ்ரீரங்கபாலந கர்மடா: | கோயிலைக் காப்பதையே நித்ய கருமமாக வுடையவர்களும் | விததது | செய்வார்களாக. |
| விஷ்வக்ஸேநஸ்ய | சேனைமுதலியாருடைய | | |

* * *—உடையவர் நித்யத்திலே விஷ்வக்ஸேந ப்ரணமமருளிச் செய்தபின் விஷ்வக்ஸேந பரிஜநர்களான கஜாநந, ஜயத்ஸேந, ஹரிவக்த்ர, காலப்ரக்ருதி ஸம்ஜ்ஞர்களில். நமஸ்காரம் சொல்லப்பட்டுள்ளது; அதனை அநுஷ்டிக்கிறார். இந்த ச்லோகத்தில் பக்தர்களின் பலவகைப்பட்ட இடையூறுகளையும் ஒழிக்கவல்லவர்களாய், திருவரங்கப் பெருநகரை நாற்புறமும் எப்பொழுதும் காத்து வருமவர்களாய், ஸேனை முதலியாருடைய ப்ரதாந படர்களான இவர்கள் நமக்குச் சேமமளிக்கவேணு மென்றாராயிற்று.

'கரிமுக' என்றது கஜாநநர்க்குப் பர்யாயம். ப்ராஹ்மணர்கட்கு ஸந்த்யாவந்தநாதி நித்ய நைமித்திக கருமங்கள் எப்படி நியதமோ அப்படி இவர்கட்குத் திருவரங்கமாநகரைக் காத்தருளுந்தொழில் நியதம் என்பது தோன்ற "ஸ்ரீரங்கபாலநகர்மடாஃ" என்றார். ... (52)

श्रुतिमयमतिहर्षप्रश्रयस्मेरवक्त्रं मणिमुकुरमिवाग्रे मङ्गलं रङ्गधाम्नः।
शरणमभिगताः स्मो यत्र रूपस्वरूपस्वगुणमहिमदर्शी मोदते रङ्गशायी ॥५३॥

ச்ருதிமயமதிஹர்ஷப்ரச்ரயஸ்மேர வக்த்ரம் மணிமுகுரமிவாக்ரே மங்களம் ரங்கதாம்நஃ,
சரணமபிகதாஸ்ஸ்மோ யத்ர ரூபஸ்வரூப ஸ்வகுணமஹிமதர்சீ மோததே ரங்கசாயீ. 53

| | | | |
|---|---|---|---|
| யத்ர | யாவரொரு பெரிய திருவடியினிடத்தில் | மணிமுகுரம் இவ ஸ்திதம் | ரத்னக்கண்ணாடி போன்றிருப்பவரும் |
| ரங்கசாயீ | அழகிய மணவாளன் | அதிஹர்ஷ- | நிரம்பின ஸந்தோஷத்தாலும் |
| ரூபஸ்வரூப ஸ்வ குண மஹிம தர்சீ | திவ்யமங்கள விக்ரஹம், திவ்யாத்ம ஸ்வரூபம், திருக்கல்யாண குணங்கள் ஆகிய இவற்றின் வைலக்ஷண்யத்தை ஸாக்ஷாத்கரியாநின்று கொண்டு | ப்ரச்ரய- | விநயத்தாலும் |
| | | ஸ்மேர- | விகஸித்துள்ள |
| | | வக்த்ரம் | திருமுகமண்டலத்தை யுடைவரும் |
| | | ச்ருதிமயம் | வேதஸ்வரூபியுமான |
| | | (தம்) | அந்தப் பெரியதிருவடியை |
| மோததே | ஆநந்தப்படுகிறானோ, | சரணம் | அரணாக |
| ரங்கதாம்ந: | ஸ்ரீரங்கநாதனுடைய | அபிகதா: | பற்றினவர்களாக |
| அக்ரே | திருமுன்பே | ஸ்ம: | ஆகிறோம். |
| மங்களம் | மங்களகரமான | | |

* * *—ஸ்ரீரங்கநாதன் திருமுன்பே விளங்குகின்ற பெரிய திருவடியைத் தொழுகிறார் இதனால். [ச்ருதிமயம்] கருடன் வேதஸ்வரூபியாகச் சொல்லப்படுவன். "வேதாத்மா விஹகேச்வரஃ" என்றார் ஆளவந்தாரும். "சிரஞ்சேதனன் விழிதேகஞ் சிறைபின் சினைபதங்கள், தாக் தோள்களுருவடிவம்பெயரெசுர் சாமமுமாம், பரந்தே தமதடியார்க்குள்ள பாவங்கள் பாற்றியருள், சுரந்தேயளிக்கு மாங்கர்தமூர்திச் சுவணனுக்கே" (திருவரங்கத்துமாலை 88.) என்

ளூர் பிள்ளைப் பெருமாளையங்காரும். "ஸுபர்ணோஸி கருத்மாந்" என்று தொடங்கி (யஜுர் வேதஸம்ஹிதா—காண்டம் 4; ப்ரச்நம்—1.) ஓதியுள்ளது முணர்க.

[அதிஹர்ஷப்ரச்ரய ஸ்மேர வக்த்ரம்.] '......நேத்ரம்' என்றும் பாடமுண்டு. இடைவிடாது எம்பெருமானைக் கண்ணார அநுபவிக்கப் பெற்ற பெருமகிழ்ச்சியும் விநயமும் திருமுகமண்டலத்திலே விளங்காநிற்கிறதாம். [ரங்கதாம்நः அக்ரே மணிமுகுரமிவ] பிரபுக்கள் மங்களார்த்தமாக நிலைக்கண்ணாடியை எதிரேவைத்து நோக்கிக்கொண்டிருப்பார்கள்; தங்களிடத்திலுள்ளதெல்லாம் கண்ணாடியில் பிரதிபலிக்கும்; அப்படியே இங்குங் கண்ணாடியாகச் சொல்லப்பட்ட பெரிய திருவடியினிடத்தில் தன்னுடைய ஸ்வரூபரூபகுணங்கள் பிரதிபலிக்கக் காண்கிறாரும் திருவரங்கநாதன். எம்பெருமானுடைய ஸ்வரூபாதிகள் இவரிடத்தில் பிரதிபிம்பிக்கின்றனவென்கிற இதற்குக் கருத்து யாதெனில்; 1 "தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையேயொக்க அருள்செய்வர்" என்கிறபடியே பெரியதிருவடியைத் தன்னோடொத்த ஸ்வரூபகுணசாலியாக அருள்செய்து வைத்திருக்கிறானெம்பெருமான என்றவாறு.



[மோததே ரங்கசாயீ.] 'ரங்கநாதः' என்னாமல் 'ரங்கசாயீ' என்கையாலே, உலகத்தில் சயனித்துக்கொள்ளுமவர்கள் கண்விழிக்கும்போதே கண்ணாடிப்புறத்தில் விழிக்கும்படியாக எதிரே கண்ணாடியைவைத்திட்டுப் படுத்துக்கொள்ளும் முறைமை ஸூசிதமாகலாம். இந்த ச்லோகத்தில் கருடனுடைய பெயரை ஸாக்ஷாத்தாகக் குறிப்பிடாமலே "ச்ருதிமயம்" என்றதனால் நிரூபித்தமை அறிக. (53)



तार्क्ष्यपक्षतिवदस्य वल्लभां रुद्रया सह सुकीर्तिमर्चये ।
हर्षबाष्पमपि कीर्तिमर्थिनां यन्मुखेन कमला कटाक्षयेत् ॥५४॥

தார்க்ஷ்யபக்ஷதிவதஸ்ய வல்லபாம் ருத்ரயா ஸஹ ஸுகீர்த்திமர்ச்சயே,
ஹர்ஷபாஷ்பமபி கீர்த்திமர்த்திநாம் யந்முகேந கமலா கடாக்ஷயேத். (54)

| | | | |
|---|---|---|---|
| கமலா | பெரியபிராட்டியார் | தார்க்ஷ்ய பக்ஷதிவத் | பெரியதிருவடியின் பக்ஷமூலம் போல் |
| அர்த்திநாம் | அபேக்ஷகர்களுக்கு | அஸ்ய | இந்தப்பெரிய திருவடிக்கு |
| ஹர்ஷ பாஷ்பம் | ஆநந்தபாஷ்பத்தையும் | வல்லபாம் | காதலியான |
| கீர்த்திம் அபி | கீர்த்தியையும் | ஸுகீர்த்திம் | ஸுகீர்த்தி யென்பவளை, |
| யந்முகேந | எந்த கருடபத்நிகள் மூலமாக | ருத்ரயாஸஹ | ருத்ரையென்பவளோடுகூட |
| கடாக்ஷயேத் | கடாக்ஷித்து உண்டாக்குவரோ, | அர்ச்சயே | பூஜிக்கிறேன். |

* * *—பெரிய திருவடிக்கு 'ருத்ரா' என்றும் 'ஸுகீர்த்தி' என்றும் இரண்டு தேவிமாருளராக பகவச்சாஸ்த்ரங்களிலுள்ளது; வேதாந்ததேசிகனும் கருடதண்டகத்தில்— "ருத்ராஸுகீர்த்திஸ்தநாபோககாடோபகூட"......என்று அருளிச்செய்துளர். அந்த கருடபத்நிகளைப் போற்றுகிறாரிதில்.



மிகவுமாழ்ந்த வ்யுத்பத்தியையுடையரான நுண்ணறிவாளர் இந்த ச்லோகத்தின் முதல்பாதத்தில் பெரியதோர் அநுபபத்தி சங்கிக்க இடமுள்ளது; தார்க்ஷ்யபக்ஷதிவத் அஸ்ய வல்லபாம்" என்றிருக்கிறது. 'அஸ்ய' என்பதனால் கருடன் விவக்ஷிதனாகவேணும்; ஆகில் 'ஸ்வாத்ம பக்ஷதிவத்' என்றிருந்தால் பொருந்துமேயன்றி கருடவாசகமான பதத்தையே யிட்டுக்கூறுவது சேராது. 'கருடனுக்குத் தன்னுடைய பக்ஷமூலம்போலே வல்லபையாயிருக்கிற' என்றால் பொருந்துமே யல்லது, 'கருடனுக்கு கருடனுடைய பக்ஷமூலம்போலே யிருக்கிற' என்றால் பொருந்தாது. அஸம்பத்தமென்றே கொள்ளக்கூடிய

1. பெரியதிருமொழி 11—3—5.

தாகும். பட்டருடைய ஸ்ரீஸூக்தியில் அஸம்பத்தப்ரயோகம் ஒருபடியாலும் ஸம்பவிக்கப்ரஸக்தி யில்லை. அஜ்ஞான நாம் உண்மைப் பொருளுணர்ந்து தெளிய மாட்டாது தடுமாறுகின்றோம். சிலர் "ஸ்வாத்மபக்ஷதிவதஸ்ய வல்லபாம்" என்றிருந்த பாடம் மாறிப்போயிருக்கலாம் என்கிறார்கள்; இது ஸாஹஸிகோக்தியேயாகும். ஸஹஸா அப்படி திருத்திவிடத் துணிகின்றிலோம். உள்ளபாடத்திற்கே உபபத்தி உரைக்க வேண்டும். "ஹே தார்க்ஷ்ய! அஸ்ய (தவ) பக்ஷதிவத் வல்லபாம்" என்று ஸம்போதநமாகப் பிரித்து 'தவ' என்றொருபதம் அத்யாஹாரம் செய்துகொண்டு உரைக்கலாமென்றார்கள் சிலர். இங்ஙனே வருந்திப் பிரயோகிப்பவரல்லர் பட்டர். ஸ்வரஸமாகவே இதை அந்வயித்து உரைக்கவேணும். நாம் பதவுரையில் உரைத்தபடியே அழகியது. அநுபபத்திக்குப் பரிஹாரம் வந்துவிட்டதோ வென்னில்; கேண்மின்;—இதிலுள்ள 'அஸ்ய' என்கிறபதம் கீழ்ச்லோகத்தில் பிரதிபாதிக்கப்பட்ட கருடனைச் சுட்டிக்காட்டுகிறதாகக் கொண்டால்தான் அநுபபத்திவரும். கீழ்ச்லோகம் கருடவிஷயகமேயாயினும் அதில் ஸாக்ஷாத்தாக கருடவாசகபதமேயில்லை. 'ச்ருதிமயம்' என்றதத்தனை. அந்த ச்லோகத்திற்கும் இந்த ச்லோகத்திற்கும் ஸம்பந்தம் கொள்ளவேண்டா. ஆகவே, இதிலுள்ள 'அஸ்ய' என்னும் பதம் ச்லோகாதியிலுள்ள தார்க்ஷ்ய பதத்தினால் பிரதிபாதிக்கப்பட்ட கருடனைச் சுட்டிக் காட்டுகிறது. ஆனபின்பு உபபந்நமாகவே யுள்ளதென்றுணர்க.

இங்ஙனன்றிக்கே வேறொரு வகையாகவும் சிலர் நிர்வஹிப்பர். 'அஸ்ய' என்று கருடனைச் சொல்லுகையன்றியே கீழ்ச்லோகத்தில் 'ரங்கசாயீ' என்று சொன்ன ஸ்ரீரங்கநாதனைச் சொல்லுகிறது. வல்லபா என்பதற்கு 'மனைவி' என்றே பொருள்கொள்ள வேண்டிய நியதி இல்லை. "அமாத்யோ ராஜவல்லப:" [மந்திரி அரசனுக்கு வல்லபன்] என்னுமிடங்களிற்போல் இங்கும் பொருள் கொள்ளலாம். பெரிய திருவடியின் பக்ஷமூலங்கள் எம்பெருமானுக்கு எப்படி விதேயமா யிருக்கின்றனவோ அப்படியே அவ்வெம்பெருமானுக்கு விதேயரான ருத்ராஸுகீர்த்திகளை அர்ச்சிக்கிறேன் என்பதாகப் பொருள்கொள்ளலாமென்பர். இப்பொருளில் ஸ்வாரஸ்யமொன்று மறிகின்றிலோம். 'பெரிய திருவடியின் மனைவியர்' என்கிற அர்த்தம் விவக்ஷிதமாயிருக்க அது வெளிவராத அஸ்வாரஸ்யமுங் காண்கிறோம். கீழ் விஷ்வக்ஸேந பத்நியான ஸூத்ரவதியைப் போற்றும் ச்லோகத்தில் "ஸைந்யதுரீண ப்ராண ஸஹாயாம் ஸூத்ரவதீம்" என்றதுபோலவே இங்கும் "தார்க்ஷ்ய வல்லபாம்" என்று விவக்ஷித்தே பட்டர் அருளிச்செய்ததாக அறுதியிடலாம். நிற்க.

கருடபத்நிகளான ருத்ராஸுகீர்த்திகளின் நாமங்களை ஒரு சமத்காரமாக நிர்வசநம் பண்ணியருளி, அதனால் தேர்ந்தபொருளை உத்தரார்த்தத்தில் அருளிச்செய்கிறார். * [ரோதயதீதி ருத்ரா] என்றும், [சோபநா கீர்த்தி: (பக்தாநாம்) யயா ஸா] என்றும் அவயவார்த்தம் திருவுள்ளம் பற்றுகிறார். ஆகவே, ருத்ரா என்பதற்கு—கண்ணீர்விடச் செய்கிறவள் என்றும், ஸுகீர்த்தி என்பதற்கு—சிறந்த புகழை உண்டாக்குமவள் என்றும் பொருள்கொள்ளப்பட்டதாயிற்று. பெரிய திருவடி எம்பெருமானுக்கு அணுக்கனா யிருப்பதுபோல, தத்பத்நிகளான ருத்ராஸுகீர்த்திகள் பிராட்டிக்கு அணுக்கர்களா யிருப்பாரதலால் 'யந்மூகேந கமலாகடாக்ஷயேத்' எனப்பட்டது. பெரியபிராட்டியார் அடியவர்களுக்குப் பல பேறுகளையும் அளிக்கும் அடைவிலே ஆநந்தபாஷ்பஸம்பத்தைச் சிலர்க்கு அளிப்பதுண்டு; சிறந்தகீர்த்தி ஸம்பத்தைச் சிலர்க்கு அளிப்பதுண்டு; அவற்றை லக்ஷ்மி எங்ஙனே அளிக்கிறாளென்றால், இந்த ருத்ராஸுகீர்த்திகள் மூலமாக அளிக்கின்றாளாம். எல்லாஸம்பத்தும் லக்ஷ்மீகடாக்ஷத்தினால் தான் உண்டாகவேண்டும்; ஆநந்தபாஷ்பமாகிற ஸம்பத்தும் கீர்த்தியாகிற ஸம்பத்தும் அந்த லக்ஷ்மீகடாக்ஷத்தினால்தா னுண்டாகக் கடவன. ஆநந்தபாஷ்பத்தை யுண்டுபண்ணுகிறவளான ருத்ராதேவியும் கீர்த்தியை யுண்டுபண்ணுகிறவளான ஸுகீர்த்திதேவியும் பிராட்டிக்கு

* பட்டர் ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் ருத்ரநாம நிர்வசநம் பண்ணுமிடத்து—

"एवंरूपविविधचेष्टितहृतहृदयान् सानन्दवाष्पान् कुर्वन् रोदयतीति रुद्रः"

என்றருளிச்செய்திருப்பதும் காண்க.

நேத்ரஸ்தாநீயர்களா யிருப்பதால் அப்பிராட்டியின் அத்திருக்கண் ணோக்கங்களினால் பக்தர்களுக்கு ஆநந்தபாஷ்பமும் கீர்த்தியும் உண்டாகக் கேட்கவேணுமோ?

ஆக இந்தச்லோகத்தால்—கருடபத்நிகளான ருத்ராஸுகீர்த்திகள் பெரியபிராட்டியார்க்கு நேத்ரஸ்தாநீயர்களாகச் சொல்லக்கூடிய அந்தரங்கபூதைகள் என்று தெரிவித்தவாறு.

தார்க்ஷ்யபக்ஷதிவத் என்கிற த்ருஷ்டாந்தத்தின் கருத்து—பக்ஷமூலம்போல் நிரந்தர ஆலிங்கனத்திற்கு உரியவர்களென்கை. .... ... (54)

स्वास्त्ररूपस्फुरन्मौलि मा शब्द इत्युद्धुनानां सुरास्तर्जनीमुद्रया ।
नाथनिद्रोचितोन्निद्रताम्रेक्षणां सञ्चरन्तीं स्तुमस्तां च पञ्चायुधीम् ॥५५॥

ஸ்வாஸ்த்ரரூபஸ்புரந்மௌலி மா சப்த இதி உத்துநாநாம் ஸுராம்ஸ்தர்ஜநீமுத்ரயா,
நாதநித்ரோசிதோந்நித்ரதாம்ரேக்ஷணம் ஸஞ்சரந்தீம் ஸ்துமஸ் தாஞ்ச பஞ்சாயுதீம். 55

| | | | |
|---|---|---|---|
| ஸ்வ அஸ்த்ரரூப ஸ்புரத் மௌலி (யதாததா) | தாங்கள் அஸ்த்ரமாயிருக்குந் தன்மை தங்கள்முடிகளிலே விளங்கும்படியாக, | நித்ரா- | திருக்கண்வளர்த்திக்கு |
| ஸுராந் | தேவதைகளை | உசித- | தகுதியாக |
| மா சப்த: இதி | 'சப்தம் செய்ய வேண்டாம்' என்று | உந்நித்ர- | உறக்கமற்று (இருப்பதனால்) |
| தர்ஜநீ முத்ரயா | ஆள்காட்டி விரலையிட்டுக் காட்டுவதனால் | தாம்ர- | சிவந்திருக்கிற |
| உத்துநாநாம் | நடுங்கச் செய்கின்றதும், | ஈக்ஷணம் | கண்களையுடையதும், |
| நாத- | ஸ்ரீரங்கநாதனுடைய | ஸஞ்சரந்தீம் | உலாவிக் கொண்டிருப்பதுமான |
| | | தாம் | அந்த |
| | | பஞ்சாயுதீம் ச | பஞ்சாயுதங்களையும் |
| | | ஸ்தும: | துதிசெய்கிறோம். |

***—பஞ்சாயுதாழ்வார்களை ஸ்துதிசெய்கிறாரிதில். பக்தர்களுக்கு ஆநந்தபாஷ்பத்தையளிப்பவளான ருத்ரையைத் துதித்தபின் விரோதிகளுக்கு சோகபாஷ்பத்தையளிக்கும் பஞ்சாயுதியைத் துதிக்கவேண்டுவது ப்ராப்தமேயிறே.

சக்கரம் சங்கு சார்ங்கம் நந்தகவாள் கௌமோதகீ—இவை பஞ்சாயுதங்களெனப்படும். "சங்கு வில் வாள் தண்டு சக்கர மேந்திய அங்கைகள்" என்னக்கடவதிறே. இப்பஞ்சாயுதங்கள் அஸ்த்ர ரூபங்களாயிருக்கச்செய்தேயும் புருஷரூபங்கொண்டு உலாவும்—நித்யஸூரிகளாகையாலே. அப்படி புருஷரூபங்கொண்டிருந்தாலும் அஸ்த்ரமாயிருக்குந் தன்மையும் சிரஸ்ஸில் விளங்குமாம்; இதுசொல்லப்படுறது 'ஸ்வாஸ்த்ரரூபஸ்புரந்மௌலி' என்கிற க்ரியா விசேஷணத்தினால்.

இப்பஞ்சாயுதாழ்வார்கள் பகவத்ஸேவைக்காக வந்து திரண்ட தேவதைகளின் ஸ்தோத்ர கோஷங்களைக் கேட்டு எம்பெருமானுடைய திருக்கண் வளர்த்திக்கு இடையூறாக இதுஎன்ன சப்தம் என்று வெறுத்து 'ஸத்து ஸத்து!!' என்பாரைப்போலே 'சப்தம் செய்ய வேண்டா' என்று தாங்கள்வாயால் வெருட்டினாலும் அதுவும் எம்பெருமானுடைய திருக்கண் வளர்த்திக்குப் பாதகமாகும் என்றெண்ணி வாயால்வெருட்டாமல் தர்ஜநீமுத்ரை கொண்டே அடக்குகின்றார்களாம்; இப்படி அதிகாரம் செலுத்திக்கொண்டே காத்துக்கொண்டிருக்க வேண்டுதலால், ஒருநொடிப்பொழுதும் கண்ணுறங்க அவகாசமேயில்லை இவர்களுக்கு; அதனால் அவர்களுடைய கண்கள் செக்கச்செவேலென்று சிவந்திருக்கும். அப்படியிருக்கப் பெற்ற பஞ்சாயுதாழ்வார்களைத் துதிக்கிறோமென்றாயிற்று.

இவர்கள் தாம் நித்யஸூரிகளாகையாலே இவர்களுக்குக்கண்ணுறங்க ப்ரஸக்தியேயில்லாமலிருக்க 'நாதநித்ரோசிதோந்நித்ரதாம்ரேக்ஷணம்' என்றது ப்ரேமப்ரகர்ஷபிசுநமான அதிசயோக்தியாகும். இவ்வாழ்வார்களைநோக்கிப் பெரியாழ்வார் "உறகலுறகலுறகல் ஒண்

